# மகா சிவராத்திரி

ஜெயஸ்ரீ சாரநாதன்



1) அடி முடி காணா அதிசயம்: பிரபஞ்சத்தின் ஒரு பரிமாணம்
https://jayasreesaranathan.blogspot.com/2017/02/maha-shivaratri-enshrines-vedic-concept.html

2) வேதம் கூறும் பிரபஞ்சவியலில் சிவனும் விஷ்ணுவும் முக்தியும்
https://jayasreesaranathan.blogspot.com/2017/03/vedic-concept-of-creation-and-moksha.html

3) பிரபஞ்சவியலில் உடுக்கை ஒலியும் கொப்பூழ் தாமரையும்
https://jayasreesaranathan.blogspot.com/2017/12/vedic-concept-of-creation-from-navel.html

4) பிரபஞ்சம் செல்லும் பாதையும் பித்ரு காரியத்தின் அவசியமும்
https://jayasreesaranathan.blogspot.com/2017/12/vedic-concept-of-path-of-universe-tamil.html

5) பூமி செல்லும் திசையும், வைகுண்ட ஏகாதசியும், மகா சிவராத்திரியும்
https://jayasreesaranathan.blogspot.com/2017/12/vedic-concept-of-path-of-earth-covering.html

6) பிரபஞ்சவியலில் உலகங்களின் தோற்றமும் உயிர்களின் பிறப்பும்
https://www.tamilhindu.com/2010/05/creation-theory-6/

---

# அடி முடி காணா அதிசயம்: பிரபஞ்சத்தின் ஒரு பரிமாணம்

மஹா சிவராத்திரியை ஒட்டி கூறப்படும் கதைகளுள் நான்முகப் பிரமனும், விஷ்ணுவும் அடி முடி தேடிய கதையும் ஒன்று. இதன் தாத்பரியம் என்னவென்று ஆராய்ந்தால் சில ஆச்சர்யமான விளக்கங்கள் புலப்படுகின்றன. அவை என்ன என்று அறிந்து கொள்ள முதலில் சிவராத்திரியின் முக்கியத்துவத்தை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

***மொத்தம் நான்கு சிவராத்திரிகள் உள்ளன என்று கந்த புராணம் கூறுகிறது.***

**முதலாவதாகச் சொல்லப்படுவது நித்ய சிவராத்திரி.**

இது தினந்தோறும் பகல் மடங்கியபின், உயிர்களை உறங்கவைக்கும் இரவாக வருவது. ஒவ்வொரு இரவும் சிவனது ராத்திரிதான்.

முத்தொழில் செய்யும் மூன்று கடவுள்களுள், சிவனது பொறுப்பில் வருவது இறப்பு போன்ற உறக்கம். அதே போல் உயிர்களை விழிக்கச் செய்யும் நேரம் பிரமனது தொழில் சுறுசுறுப்பாக நடைபெறும் நேரம். உயிர்கள் தத்தம் கடமைகளையும், செயல்களையும் செய்யும் நேரம், காக்கும் தெய்வமான விஷ்ணுவின் நேரம்.

இதன் அடிப்படையில்தான் நாளைப் பகுத்துள்ளனர் பெரியோர். விடிகாலை 4 மணி முதல் 8 மணி வரை (1 மணி = 1 ஓரை = 2 1/2 நாழிகைகள்) உள்ள நேரம் நான்முகப் பிரமன் செயலாற்றும் நேரம். அந்நேரத்தில் செய்யும் நியமங்கள் சத்துவத்தை அதிகப்படுத்துவன. அந்நேரத்தில் உட்கொள்ளும் உணவு சுறுசுறுப்புக்கும், உடல், மன வளர்ச்சிக்கும் உதவுவதாக அமையும்.

காலை 8 மணி முதல் முன்மாலை 4 மணி வரை விஷ்ணுவின் நேரம். இந்த நேரத்தில் உடலும், உள்ளமும் நன்கு உழைத்து, செயலாற்ற ஒத்துழைக்கும்.

மாலை 4 முதல் இரவு 8 மணி வரை மீண்டும் பிரமனின் நேரம். பிரமன் தொழிலாக, மீண்டும் உடல் மற்றும் மனதின் புத்துணர்வுக்கு ஓய்வும், உணவும் உடலில் ஒட்டும் நேரம் இது.

இரவு 8 மணிக்குள் உணவை முடித்துக் கொள்வதுதான் நல்லது. அதன் பிறகு, இரவு 8 மணி முதல், காலை 4 மணி வரை சிவனது நேரம். செயல்பாடுகள் நின்று, இறப்பு போன்ற தூக்கத்தில் அமிழும் நேரம் அது.

நம் உடலுறுப்புகளின் செயல்பாடும் இப்படியே மூன்று தெய்வங்களது செயல்பாட்டினை ஒட்டியே அமைவதால், ஒவ்வொரு மனிதனின் உடலிலும், மூன்று தெய்வங்களின் அம்சமும் உள்ளன. ஒவ்வொரு மனிதனும் மூன்று தெய்வங்களின் அருளால் ஒவ்வொரு நாளும் மூன்று நிலைகளில் சுற்றிக் கொண்டிருக்கிறான். அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இதை உணர்ந்தாலும் உணராவிட்டாலும் மூன்று தெய்வங்களும் அவன் உடல், மன நிலைகளை மேற்பார்வை பார்க்கும் வேலையைச் செய்து கொண்டுதான் இருக்கின்றன.

இவற்றுள், அழித்தல் கடவுளான சிவனது நேரம் இரவாக இருக்கவே ஒவ்வொரு இரவும் சிவராத்திரிதான். அழித்தல் என்று எல்லாவற்றையும் ஒடுக்கி விடுவது போன்ற இந்தத் தொழிலின் முக்கிய அம்சம், அழித்தல் மட்டும் அல்ல. அழித்தல் போன்ற உறங்கும் நிலையிலும், நம் உள் மனம் விழித்திருக்கிறது. நாம் அறியாத நிலையில் உள்ளே சலனங்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. இங்கே தான் மஹா சிவராத்திரியின் முக்கியத்துவம் வருகிறது. அது என்ன என்று பார்ப்பதற்குமுன், மற்ற மூன்று சிவராத்திரிகளைப் பார்ப்போம்.

**இரண்டாவது சிவராத்திரி மாத சிவராத்திரி எனப்படுவது**.

ஒவ்வொரு மாதமும் தேய்பிறை சதுர்தசியில் வருவது. இதுவும் ஒருவித அழித்தலைக் குறிப்பது. பௌர்ணமியில் ஒளிர்ந்த சந்திரன், தேய்ந்து முழுவதும் மறைவதற்குமுன் வரும் ராத்திரி மாத சிவராத்திரி ஆகும்.

**மூன்றாவது சிவராத்திரி வருடம்தோறும் மாசி மாதம் தேய்பிறையில் முதல் 13 நாட்களும் அனுஷ்டிக்கப்படுவது.**

**அது முடிந்த 14-ஆம் நாள் வரும் மகா சிவராத்திரி, 4-ஆவது சிவராத்திரி ஆகும்.**

இந்த மகா சிவராத்திரி முடிந்த மறுநாள் கலியுகம் ஆரம்பித்த நாள். ஒரு அழிவைத் தொடந்து இன்னொரு ஆக்கம் வரும் என்று காட்டுவது இது. ஆயினும், பிறப்பது கலியுகம் என்பதால், அழிவிலிருந்து உண்டாகும் ஆக்கம் சுமாரான ஒன்றாகத் தானே இருக்கிறது என்று நமக்குத் தோன்றலாம். ஒன்றிலிருந்து ஒன்று உருமாறி வரும்போது, சுமாரான காலம்- அது அழிந்தாலும், அதனிலிருந்து உருவாவது ஏனோ தானோ என்றுதானே இருக்கும்? சிறந்த ஒன்று உருவாக வேண்டுமென்றால், ஒட்டு மொத்தமாக எல்லாவற்றையும் அழித்துவிட்டுப் புதிதாக உற்பத்தி செய்தால்தானே உண்டு?

இதுதான் அடி முடி காணா சிவராத்திரியின் போது நிகழ்ந்து, ஒரு புது சுழற்சி உண்டாக ஏதுவாகிறது. இதைப் புரிந்து கொள்ள வேதம் கூறும் பிரபஞ்ச நிலையை- A Vedic Model of Creation-ஐத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**வேதம் கூறும் பிரபஞ்ச அறிவியல்**

இன்றைய அறிவியலார் Big Bang என்னும் வெடிச் சிதறலில் இருந்து நாம் இருக்கும் உலகங்கள் உண்டாயின என்கின்றனர். சமீபத்திய ஆராய்ச்சிகள் இந்த ஊகம் தவறென்றும், மாறாக, படைப்பு என்பது நுண்ணிய அணுக்கள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு மாறும் String theory -ஆக இருக்கலாம் என்றும் காட்டுகின்றன. வேதம் காட்டும் அண்ட சராசரங்களின் படைப்பை நோக்கினால் இந்நாள் அறிவியலார் இன்னும் விரிந்த சிந்தையை அடையவில்லை என்று தெரிகிறது.

அப்படி என்ன விரிந்த சிந்தனையை வேதம் காட்டுகிறது என்றால், இதோ சில முக்கியக் கருத்துக்கள்.

1) நாம் இருக்கும் இந்த அண்டவெளி மட்டுமல்ல, கோடானு கோடி அண்டவெளிகள், பலப் பல உலகங்களைத் தாங்கிக் கொண்டு இருக்கின்றன.

2) நமக்கு மேலும் கீழும் நமக்கு அப்பாலும் நம்மை அப்பால் கொண்டும் பிரபஞ்சங்கள் இருக்கின்றன.

3) அவை எல்லாம் பிரம்மன் என்றும் ஹிரண்யகர்பன் என்றும் சொல்ல படும் அந்த முழுமுதல் இறைவனின் கர்ப்பத்தில் உள்ளன.

4) கணக்கிட இயலாதவையாக அவை உள்ளன.

5) இந்த உலகங்கள் என்று ஆரம்பித்தன என்றும் தெரியாத, சொல்ல முடியாத ஆதியும் இல்லாமல், அந்தமும் இல்லாமல் இருக்கின்றன. இவை எல்லாவற்றிலும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்று தொழில்களும் இடைவிடாது நடந்து கொண்டிருக்கின்றன.

6) புருஷ சூக்தம் கூறும் குறிப்பிடத்தக்க அமைப்பு, கவனிக்கத் தக்கது. இறைவனே படைத்து, எல்லாவற்றிலும் வியாபித்து இருந்தாலும், தோன்றியவை எல்லாம் அவருடைய கால் பங்கு மட்டுமே. அவரது முக்கால் பங்கு அழிவற்றதான விண்ணில் இருக்கிறது. பரம்பொருளின் முக்கால் பங்கு மேலே விளங்குகிறது. எஞ்சிய கால் பங்கு மீண்டும் இந்தப் பிரபஞ்சமாகத் தோன்றியது என்று 3, 4 -ஆம் ஸ்லோகங்கள் கூறுகின்றன.

இப்படிப்பட்ட அமைப்பு எவ்வாறு இருக்கும் என்று சிந்தித்தால், அது சக்கர வடிவுடையதாக இருக்க வேண்டும். இதற்கும் பிரமாணம் உள்ளது. ச்வேதாஸ்வதர உபநிஷதத்தில், இந்தப் பிரபஞ்சம் பிரம்மச் சக்கரமாக உள்ளது என்று விவரிக்கப்படுகின்றது. இதன் பலவித பாகங்களும் விவரிக்கப்பட்டு, இதில், கர்மம் என்னும் பாசக் கயிற்றில் கட்டப்பட்டு ஜீவன் சுழன்று வருகிறான். மீண்டும்

மீண்டும் சுழலுகையில், பிரம்ம ஸ்வரூபத்தைப் புரிந்துகொண்டு, இந்தச் சக்கரத்தில் சுழலச் செய்யும் பிறவிப் பிணியிலிருந்து முடிவில் விடுபடுகிறான்.

ஆக, உலகங்களையும், பால்வெளி போன்ற கலாக்சிகளையும் தன்னகத்தே கொண்ட பிரபஞ்சம் சுழலும் சக்கர வடிவினதாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட அமைப்பில்தான், ஆதியும் இருக்காது, அந்தமும் இருக்காது. சக்கர அமைப்பில்தான் எங்கே தோன்றியது, எங்கே முடிந்தது என்று சொல்ல முடியாமல் இருக்கும். கணக்கிலடங்காத பல சக்கரங்கள் ஒன்றுக்கு அப்பால் ஒன்றென infinity அளவில் இருக்க முடியும். ஒன்றுக்கு மேலும், அல்லது கீழும் என்றும், Concurrent circles- ஆக முடிவில்லாமல், கணக்கில்லாமல் ஒன்றை அடுத்து ஒன்றாகவும் இருக்க முடியும்.

கால நேமி என்று உபநிஷத் சொல்லும் இந்த அமைப்பில் தோற்றம் என்னும் நிலையில் கால் பங்கு உள்ளன. முக்கால் பங்கு என்றுமே தோன்றாதவை.

இந்த அமைப்பில் உலகங்கள் நுண் அணுத் துகள்களாக unmanifest எனப்படும் வெளிப்பாடு இல்லாத முக்கால் பகுதியில் சுற்றி வரும். தோற்றம் இருக்கும் கால் பகுதியுள் நுழையும்போது ஸ்ட்ரிங் தியரி (String theory) போல, தெரியா நிலையிலிருந்து, தெரிநிலைக்கு, அதாவது manifest நிலைக்கு மாறி தோற்றம் அல்லது படைப்பு என்னும் பகுதிக்குள் விரையும்.

அப்படிப்பட்ட அமைப்பு நடராஜரின் தாண்டவக் கோலத்தில் காணப்படுகிறது!



நடராஜர் உருவ அமைப்பு, நாட்டியத்திலும், சிற்ப சாத்திரத்திலும் சில குறிப்பிட்ட அளவுகளைக் கொண்டது. ஒரு வட்ட வடிவத்தினுள், இரண்டு முக்கோணங்களை மேலும், கீழுமாக உள்ளடக்கியது.

இந்தப் படம் சுதர்சனச் சக்கரமும் தான்!

நடராஜர் உருவத்தை இந்த அமைப்புக்குள்தான் வடிவமைப்பர். சுதர்சனரும் யோகா நரசிம்ஹரும் இணைந்த உருவமும் இந்த அமைப்புக்குள்தான் அடங்கும்.



நடராஜரைக் கவனித்தால், ஒரு அரிய காஸ்மிக் அமைப்பு புலனாகும். அவரது மேல் இரண்டு கைகளிலும், ஒன்றில் உடுக்கையும், மற்றொன்றில் அக்கினியும் வைத்திருப்பார். இந்த இரண்டு கைகளையும், அவரது நாபியுடன் இணைத்து, கோடுகளாக நீட்டினால், அவை சக்கரத்தை 90 பாகைகளிலான 4 சம கூறுகளாகப் பிரிக்கும். இங்குதான் வேத மதம் கூறும் Theory of Creation- பிரபஞ்சத்தின் அமைப்பு காணப்படுகிறது.



வலக் கை உடுக்கையிலிருந்து, இடக் கை அக்கினி வரை இருப்பது 'தோன்றும் பிரபஞ்சம்' (எ) 'the visible part of Creation'. அக்கினியிலிருந்து, உடுக்கை வரை unmanifest பிரபஞ்சம் (-) the invisible part of Creation. அதன் மையப்பகுதி அந்தகாரம் என்னும் அதி இருட்டு. அது, அசுரனை மிதித்து அடக்குவதாகக் காட்டப்படுகிறது.

நடராஜர் தன் இடது காலை வீசி உயர்த்திய வீச்சு காட்டும் பகுதி முதல், தோற்றத்திற்குத் தயாராகிற - இன்னும் உருவம் கொள்ளாத பிரபஞ்சத் துகள்கள் இடித்தும், வெடித்தும் அழிவின் மூலம், ஆக்கம் நோக்கிப் பாயும் பிரபஞ்சப் பகுதியைக் காட்டுகிறது.




அந்தப் பகுதியில், மற்ற இரு கைகளின் முத்திரைகளும், Force- அதற்குப் போட்டியான Anti-Force தத்துவங்களாக சிவா- பார்வதி போட்டியைக் காட்டுகின்றன. உடுக்கை அடிக்கும் கைப் பகுதியை நெருங்க நெருங்க, ஊர்த்துவ முகமான, மேல் நோக்கிய கை செல்லும் பாதையைக் காட்ட, ஓம்கார நாதத்திலிருந்து உலகங்கள் பிறக்கின்றன.




மேல் காட்டிய படத்தில் உடுக்கை முதல், மறுகையில் உள்ள அக்கினி வரை, இருக்கும் பகுதி சக்கரத்தின் கால் பகுதி. இதுவே புருஷ சூக்தம் கூறும் மீண்டும் மீண்டும் தோன்றி வரும் கால் பங்கு பிரபஞ்சம். இந்தப் படத்தில், உடுக்கைப் பகுதியில், படைப்புக் கடவுளான நான்முகப் பிரமனின் வேலை தொடங்குகிறது. இங்கே சிவனுக்கு வேலை இல்லை. மேலும் கீழும், எல்லை இல்லாத இந்தப் பகுதியில், பல பிரமன்கள் பல்வேறு பிரபஞ்சங்களில் படைப்புக்கு ஆதாரமாக விளங்குகின்றார். இங்கே சிவனும் தென்படுவதில்லை. விஷ்ணுவும் தென்படுவதில்லை.

படைப்பு தொடங்கியவுடன், அது விஷ்ணு பதம் ஆகிறது. உடுக்கைப் பகுதி முதல், அக்கினிப் பகுதி வரை, விஷ்ணுவின் காக்கும் பகுதியும், காலமும் ஆகும்.

இது பிரமனின் ஆயுளில் 100 வருடங்கள். (31104000,00,00,000 மனித வருடங்கள்) நாம் இன்று இருப்பது பிரமனின் ஆயுளில் 50 வருடங்கள் தாண்டி, முதல் நாள் மத்தியானம். அதாவது, நடராஜரது தலை உச்சி காட்டும் பகுதியில் நாம் இப்பொழுது இருக்கிறோம். இன்னும் பாதி காலம் தாண்டினால் இந்தப் பிரபஞ்சம், அக்கினிப் பகுதியைச் சென்றடையும்.

படைத்து, காத்த இந்தப் பிரபஞ்சம், முழு அழிவைச் சந்திக்கும் இடம் அது. அங்கே பிரமனுக்கும், விஷ்ணுவுக்கும் வேலை இல்லை. மேலும், கீழும் பார்த்தாலும், எல்லை இல்லாத அக்கினிப் பிழம்பாக இருக்கும் அதுதான் மகா சிவராத்திரி. அது தான் அடி முடி காண இயலா அதிசயம் நிகழும் இந்தப் பிரபஞ்சத்தின், அதன் தோற்றத்தின் முடிவு நாள்.




தோற்றம் உள்ள பிரபஞ்சத்திலிருந்து, தோன்றவியலாத முக்கால் பங்கு பிரபஞ்சத்திற்கு உலகங்கள் விரையும்போது, சிவபெருமானின் பிரளய அக்கினியில் உலகங்கள் எல்லாம் அழிகின்றன. இந்தப் பகுதியில், குறுக்குவாட்டிலும், நெடுக்குவாட்டிலும் அக்கினிதான் உள்ளது. ஒரு சுவராக, ஒரு மா மலையாக இந்த Exit- zone-இல் சிவபெருமான் அக்கினி ரூபத்தில் நிற்கிறார். அதுதான் அடி முடி காண இயலா உருவம். அது நடந்தது அல்லது நடக்கப்போவது மாசி மாத தேய்பிறை சதுர்தசியில். அதுவே மகா சிவராத்திரி எனப்படுவது.

மகா சிவராத்திரியின் முக்கியக் கதை, அழிவிலிருந்து உயிர்களைக் காப்பாற்றுமாறு பார்வதி வேண்டிகொண்டது. கால் பங்கு தோற்ற வெளியில், பிரமனின் 100 ஆண்டு காலமும், உயிர்கள் கர்ம வினையில் பிணைபட்டு உழன்று விட்டன. இப்பொழுதோ 'ஆட்டம் க்ளோஸ்' என்று சிவபெருமான் தாண்டவம் ஆடுகிறார். அப்படி என்றால், இன்னும் முக்கால் பங்கு பிரபஞ்சமும், அதாவது பிரமனின் வயதுக் கணக்கில் 300 வருடங்களும் உயிர்கள் பிணைபட்டுக் கிடக்க வேண்டுமா? அவற்றுக்கு விடிவு கிடையாதா என்று பார்வதி வேண்டிக்கொள்ளவே 'கடைசி சான்ஸ்' என்று மகா சிவராத்திரி விரதம் கடைபிடிக்கப்படவே, சிவபெருமான் உயிர்களுக்கு விடிவு கொடுக்கிறார்.

அந்தகாரமான இருளிலும், அழிவிலும் கூட நடராஜரது ஆட்டம் தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அவரது பலம் வெளித்தெரியும் சிவராத்திரியில்,

பக்தர்களும், அந்தச் சலனத்தை மேற்கொண்டு, கண்விழித்து அவரைத் தியானிக்கிறார்கள். அந்தத் தியானம் கடவுள்களுள் யார் பெரியவர் என்று தெரிந்து கொள்வதற்காக அல்லது தெரிந்து கொண்டதற்காக அல்ல. பிரளயாக்கினியிலிருந்து தப்ப, அதைத் தரும் சிவபெருமானை வேண்டி விடுதலை பெறவே, அடி முடி காண இயலாத இறைவனாக வழிபடுகின்றனர் .

இந்தத் தாத்பரியத்தின் ஒரு அடிப்படைதான், நான்முகப் பிரமனுக்குக் கோவில் இல்லாமல் இருப்பது (சில இடங்களில் விதிவிலக்காக இருக்கின்றன.) பிரமனின் 'கெம்பா' (எ) உடுக்கை காட்டும் படைப்பின் ஆரம்ப இடம். பிரமனிலிருந்துதான் மற்ற கடவுள்கள் தோன்றுகின்றனர். அவர்கள் தத்தமது செய்யல்பாடுகளாக படைப்பை மேலும் எடுத்துச் செல்கின்றனர். அதனால் தோற்றம் உள்ள கால் பகுதியில் பிரமனைக் காண இயலாது. அங்கே பிரமனுக்குக் கோயில் கிடையாது. மாறாக, எல்லாக் கோயில்களிலும், வருடாந்திர பிரம்மோத்சவத்தின் போது, பிரமன்தான் அங்கு உற்சவத்தை நடத்திச் செல்பவராக முதலில் இருக்கிறார். அதுதான் பிரம்மோத்சவத்தின் பெயர்க் காரணமும் ஆகும்.

படைப்பு என்று உயிர்கள் கால் பதித்தவுடன், அங்கு தானும் கால் பதிப்பவர் விஷ்ணு. பிரமனின் 100 வயது காலமும், ஓடி ஆடி, அவதாரங்கள் பல எடுத்து, உயிர்களைக் காத்து, வழிப்படுத்தி என்று, ஒரு 'சூப்பர் ஸ்டார்' வேலை விஷ்ணுவுக்கு.

மேலே காட்டிய படங்களில், ஒவ்வொரு சுற்றும், ஒரு குறிப்பிட்ட பௌதிக விதிகளுக்குட்பட்ட பிரபஞ்சம். இதைப் போல், கணக்கிடமுடியாத பல பிரபஞ்சங்களும் அதனதன் விதிகளுக்கு உட்பட்டு கால் பங்கு தோற்றமாகவும், முக்கால் பங்கு தோற்றம் இல்லாத சஞ்சரிப்பாகவும் உள்ளன. எந்நேரமும் கால் பங்கு பகுதியில் நுழைவும், நீங்குதலும் நடந்து கொண்டே இருக்கின்றன. எந்நேரமும் புதிது புதிதாக பிரமன்கள் தோன்றிப் படைத்துக்கொண்டே இருக்கின்றார்கள். விஷ்ணுவும், சிவனும் தொழில் செய்துகொண்டே இருக்கின்றார்கள். எல்லா பிரமன்களுக்கும் ஆயுள் 100 தான். சக்கரத்தின் அச்சின் அருகில் உள்ள பிரபஞ்சத்தில் வேகம் அதிகம். சீக்கிரமே 100 வயது ஆயுள் முடிந்து விடும். ஆனால் ஆயுள் 100 என்பதற்கு ஏற்றார்போல் நாள், வருடக் கணக்குகள் அங்கே இருக்கும்.

இவை எல்லாமே சக்கர வடிவான அமைப்பில் சௌக்கியமாக இருக்கின்றன. 'சௌக்கியமாக' என்று ஏன் அப்படிச் சொல்கிறேன் என்றால், வாஸ்து சாத்திரப்படி, 16 வித நில அல்லது கட்டமைப்புகளுள், 'விருத்தாகாரம்' என்னும் வட்ட வடிவ அமைப்பு சிறந்தது. பாதுகாப்பனது. அது மட்டுமல்ல, அறிவு ஆன்மிக வளர்ச்சிக்கு உதவுவது. கல்விச் சாலைகளும், ஆன்மிகம் போதிக்கும் மடங்களும் வட்ட வடிவில் இருப்பது சிறந்தது.

சக்கரத்தாழ்வாராக இந்த அமைப்பு இருப்பதால்தான், அவரது பாதுகாப்பில் பிரபஞ்சமே சுழன்று கொண்டிருக்கிறது.



இந்த பிரம்மாணடமான சக்கரத்தில், யோக நரசிம்ஹரும் யோகத்தில் ஆழ்ந்து, சக்கரத்துடனேயே, பயணிக்கிறார். பிரபஞ்சம் முழுவதும் நீக்கமற நிறைந்து, எல்லாப் பொருள்களிலும் உள்ளிலிருந்து கடையும் கடவுளாக, யோகேஸ்வரனாக இருக்கிறார்.

இவை எல்லாம் நாராயணன் என்னும் பரப் பிரம்மத்தின் கருவில் உள்ளன என்று பிரமாண நூல்கள் கூறுகின்றன. நாராயணன் என்றாலே, 'அவன் எல்லாவற்றிலும் இருக்கிறான், அவனில் எல்லாம் இருக்கின்றன' என்பது பொருள். அவனைப் பிரம்மம் என்பர். கால் பகுதியின் படைப்புக் கடவுளான பிரமனை நான்முகப் பிரமன் என்பர். நான்கு திசைகளிலும் பார்த்து படைப்பை ஆரம்பிக்கவே அவருக்கு நான்கு முகங்களும், இந்தப் பெயரும் ஏற்பட்டன.

ஆனால் பிரபஞ்சத்தையே தன் கருவாகக் கொண்ட பிரம்மம், முழு முதல் பிரம்மம். பிரம்மம் என்றால் பெரியது என்றும், விரிந்துகொண்டே இருப்பது என்றும் பொருள். அந்த பிரம்மமே அனைத்து உலகிலும், மூன்று மூர்த்திகள் உள்ளிட்ட எல்லாத் தெய்வங்களிலும் வியாபித்துள்ளார்.

அண்டத்தில் உள்ளது, பிண்டத்திலும் இருக்கும் என்பதற்கு ஏற்றார்போல இந்த அண்டம் சார்ந்த கடவுள் நிலைகளை, நம் மனித உடலிலும் காணலாம். நம் உடலெங்கும் பல பாகங்கள் பல வேலைகளைச் செய்கின்றன. கண் பார்க்கிறது, காது கேட்கிறது, உள் உறுப்புகள் அனைத்தும் இரத்த ஓட்டம், கழிவு நீக்குதல், என்று ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேலையைச் செய்கின்றன- ஒவ்வொரு கடவுளும், ஒவ்வொரு வேலைக்கு அதிபதிகளாக இயங்குவதைப் போல.

இந்த உறுப்புகளுக்கெல்லாம் அதிபதி மூளை. மூளையின் செயல்பாடே இவ்வுறுப்புகள் மூலம் நடைபெறுகிறது- முழு முதல் பிரம்மன், மற்ற கடவுள்கள் மூலம் இயக்குவதைப் போல.

நம் உடல் முழுவதும், உயிர் வியாபித்துள்ளது- நாராயணன் எங்கும் வியாபித்து இருப்பதைப் போல.

ஜடப் பொருளிலும் அவன் வியாபித்துள்ளான். இதைப் புரிந்துகொள்ள, நடராஜ தத்துவம் தெரிய வேண்டும். தோற்றம் இல்லா முக்கால் பங்கு

பிரபஞ்சத்திலும் நடராஜரது நடன அசைவு உள்ளது போல, ஜடப் பொருளிலும் அவற்றின் அணுவுக்குள் இருக்கும் அசைவாக நாராயணன் வியாபித்துள்ளான்.

நமக்குள் யோகேஸ்வரனாக இருப்பதையும், சக்கரத்தாழ்வானாகக் காப்பதையும், பிரபஞ்சச் சுழற்சியைக் காட்டி நடராஜராக தாண்டவம் ஆடுவதையும் ஒரே உருவில் காட்டப்படும் அந்தச் சக்கரம் சு-தர்சனச் சக்கரம். சுதர்சனம் என்றால் சிறந்த தரிசனம் என்று பொருள்.

சக்கரம் போன்ற நம் உடலிலும், ஒரு உறுப்புக்கும் மற்றொரு உறுப்புக்கும் போட்டி கிடையாது, பொறாமை கிடையாது. கண், ஒலியைக் கேட்காது, காது, காட்சிகளைப் பார்க்காது. அவை அவை தத்தம் செயல்களை ஆற்றுகின்றன. ஆனால் நாம் எப்பொழுதுமே மூளையை நினைவில் கொள்வதில்லை. உறுப்புகளின் செயல்பாடுகள் மூலமாக மூளையின் முக்கியத்துவத்தை அறிகிறோம். மூளையைப் போல அந்தப் பரம்பொருள் இருக்கிறான். அவன் இருக்கிறான், அவனே நம் குறிக்கோள் என்று புரிந்து கொள்ள, நம் உடல் உறுப்புகள் போல பல கடவுளர்களும் உதவுகின்றனர்.

அக்கடவுளர்களுக்குள் போட்டி என்றோ, சண்டை என்றோ கதைகள் வழங்கி வந்தால், சிறிய குழந்தைகள் போல வெளிப் பார்வைக்குத் தெரியும் கதையை எடுத்துக் கொள்ளக்கூடாது. ஏதோ உள்ளர்த்தம் இருக்க வேண்டும் என்று தேட வேண்டும். அப்படி நம்மைத் தேடச் செய்வதற்குத் தான் அப்படிப்பட்ட கதைகள் எழுந்துள்ளன. தேடினால் தான் கிடைக்கும், சு-தர்சனம்- இறைவனின் சிறந்த தரிசனம்.

---

# வேதம் கூறும் பிரபஞ்சவியலில் சிவனும் விஷ்ணுவும் முக்தியும்

வேதம் கூறும் பிரபஞ்சவியலில் ஒன்றுக்கு மேல் ஒன்றாகவும், ஒன்றையடுத்து ஒன்றாகவும் முடிவில்லாமல் (infinity) பலப்பல உலகங்கள் (Universes) வட்டப்பாதையில் சுற்றிக் கொண்டே இருக்கின்றன என்று பார்த்தோம். இவற்றில் எப்பொழுதுமே கால் பங்கு, தோற்றம் கொண்டவையாகவும் (manifest) மீதி முக்கால் பங்கு, தோற்றம் இல்லா நிலையிலும் (unmanifest) இருப்பதை நடராஜரின் தாண்டவம் எப்படிக் காட்டுகிறது என்றும் பார்த்தோம்.

இந்த அமைப்பில் மும்மூர்த்திகளும் ஓய்வு ஒழிவில்லாது இயங்கிக் கொண்டிருக்கின்றனர். இவை அனைத்தையும் தாங்கியும், ஊடுருவியும் இருக்கும் முழு முதல் பரப் பிரம்மம் நாராயணன் எனப்படுகிறான் என்று பிரமாண நூல்கள் கூறுகின்றன என்றும் பார்த்தோம். இந்த நூல்கள் உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரம், பகவத் கீதை என்பவை என்று அனைத்து ஆசார்ய புருஷர்களும் கூறியுள்ளனர். இவை constitution of India போன்றவை. இவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் இந்து மதத்தின் எல்லா வழிகளும், வழக்கங்களும் எழுந்துள்ளன.

கர்ம வினையால் பிறந்து, இறந்து, மீண்டும் மீண்டும் உழன்று கொண்டிருக்கும் உயிர்கள், இந்தப் பிரபஞ்சச் சக்கரத்தினின்று விடுதலை பெறுதலை 'முக்தி' என்கிறோம். விடுதலை என்பதால் அந்த நிலைக்கு வீடு என்னும் பெயர் ஏற்பட்டது. வீடு பேறு, முக்தி, மோக்ஷம் இவை எல்லாமே விடுதலை என்னும் பொருள் கொண்டவை.

முக்தி பெற சிவனை வணங்கினால் என்ன, விஷ்ணுவை வணங்கினால் என்ன, இதில் என்ன பேதம் இருக்கிறது என்று எண்ணலாம். அப்படி அல்ல, இந்தக் கடவுளை வணங்கினால்தான் முக்தி, அந்தக் கடவுளை வணங்கினால் முக்தி கிடைக்காது என்றும் எண்ணலாம். இதன் விளைவாக எந்தக் கடவுள் பெரியவர் என்ற சர்ச்சையும் பல காலம் நடந்து வந்திருக்கிறது. பல காலம் என்றேன், அப்படி என்றால் பல காலத்துக்கு முன், அந்த நாளில் இந்தச் சர்ச்சை இல்லையா என்றால், இல்லை என்று சொல்லலாம். காரணம், இவை குறித்த கருத்துகளை அந்த நாளில் தெளிவாக அறிந்திருந்தனர். அதற்கும் காரணம், பிரமாண நூல்கள் சொல்லும் கருத்துகளைத் தெளிவாகப் புரிந்து கொண்டிருந்தனர்.

எனவே பிரமாண நூல்கள் என்ன சொல்கின்றன என்று பார்ப்போம்.

இந்த மூன்று நூல்களுள், பிரம்ம சூத்திரம் முழுவதுமே, பிறக்கும் உயிர்களின் நிலை, பரம் பொருள் என்னும் பரப் பிரம்மத்தின் நிலை, அந்தப் பரம் பொருளை அடையும் விதம் ஆகியவை பற்றி ரிஷிகள் கூறியுள்ள விஷயங்களை சூத்திரங்களாகக் கொண்டுள்ளது. அந்த நாளிலும் எழுந்துள்ள பல எதிர் விவாதங்களுக்கு பதில் அளிக்கும் விதமாகவும் அவை உள்ளன.

அவை கூறுவது என்னவென்றால், பரப் பிரம்மனையே தியானித்து வந்தால், அந்த பிரம்ம நிலையை ஒருவன் அடைவான். பிரம்மம் என்பதற்கு எளிமையான விளக்கம் **'சத்யம், ஞானம் அனந்தம்** (எல்லை இல்லாதவன்)' என்பதே. இந்த மூன்று குணங்களைக் கொண்டவனாக இறைவனை எந்நேரமும் நினைத்து வந்தால், முக்தி கிடைக்கும்.

இவை எல்லாம் சொல்வதற்கு நன்றாக இருக்கும். பரப் பிரம்மனது ரூபம் என்ன? நான் சிவனை வாங்குகிறேன். அவனை பிரம்மமாக தியானித்தால், எனக்கு முக்தி கிடைக்காதா?

அல்லது ராமனை வணங்கும் நான் அவனைப் பிரம்மமாக நினைத்து தியானம் செய்தால் முக்தி கிடைக்காதா?

நாராயணனை மட்டுமே தியானம் செய்தால்தான் முக்தி கிடைக்குமா? அப்படி என்றால், சிவனடியார்கள் பலரும் முக்தி அடைந்ததாக நூல்கள் கூறியுள்ளனவே, அவை பொய் என்று ஆகாதா? மேலும் எந்த ஒரு தெய்வ உருவையும் அல்லாது ஞான வடிவாகப் பல சித்தர்கள் தியானித்து பரம நிலை அடைந்துள்ளனரே, அது எப்படி? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் நேரிடையான பதில் ஜோதிடத்தில் உள்ளது.

**ஜோதிடம் காட்டும் முக்தி**

ஜோதிடமா, அது புரட்டு, என்று சொல்லும் முன், இதைத் தெரிந்து கொள்ளவேண்டும். ஜோதிடம் என்றால் 'ஒளியியல்' (Science of Light) - ஜ்யோதி-இஷா என்று அர்த்தம். அந்தப் பரம் பொருள் கோடி சூர்ய ஒளி உடையவன். விராட புருஷனாக பிரபஞ்சத்தில் வியாபித்துள்ள அவன் உருவம் நட்சத்திரங்களின் உருவம் - "நட்சத்த்ராணி ரூபம்' என்று புருஷ சூக்தம் சொல்கிறது. அதாவது அந்தப் பரம புருஷன் நக்ஷத்திர ரூபத்தில் உள்ளான்.

'நக்ஷ்' என்னும் வடமொழி வேர்ச் சொல்லிலிருந்து நக்ஷத்ரம் என்னும் சொல் உண்டானது. நக்ஷ் என்றால் அடைதல் என்று பொருள். (to attain) எதை அடைய வேண்டுமோ அது நக்ஷத்ரம். மேலும் இது 'ந- க்ஷீயதே' - குறையாதது என்றும் பொருள்படும். குறையாததும், குறைவில்லாததும் அடையப்பட வேண்டியதும் பிரம்மம், எனவே நக்ஷத்ரம் அவன் ரூபமாகிறது.

அவனிலிருந்துதான் நாம் வந்தோம், அவனில்தான் முடிவில் ஐக்கியமாவோம் என்னும்படி, கண்ணுக்குத் தெரியும் நக்ஷத்திரமான சூரியனிலிருந்துதான் நம் பூமி வந்தது. முடிவில் சூரியனைத்தான் அது அடையப் போகிறது. ஒவ்வொரு நக்ஷத்திரமும் அது வந்த ஜ்யோதியில்தான் கடைசியில் ஐக்கியமாகப் போகின்றன.

நக்ஷத்ரங்களின் ஒளி இயல்தான் ஜ்யோதிஷம் - எவ்வாறு என்றால், சூரியன் காலை இதமாகக் காய்கிறான். மதியம் உஷ்ணமாகக் காய்கிறான். பின்மதியம், அவன் உக்ரம் தாங்க முடிவதில்லை. ஆனால் மாலை மிதமாகி, இரவில் நம் இயக்கத்தையே குறைத்து விடுகிறான்.

மேல்சொன்ன ஒவ்வொரு பொழுதிலும், கோடிக்கணக்கான விஷயங்கள் நடக்கின்றன. தாவரங்கள் உணவு உண்டாக்குவதிலிருந்து, கிருமிகள் அழிவதும், நீர் மேகம் உண்டாவதும், என்று பல செயல்களுக்கு அந்தச்
சூரியன் காரணமாகிறான். ஆனால் உண்மையில் நடப்பது என்ன?

அவனா செய்கிறான்? அவன் எங்கோ நிலையாக இருக்கிறான். நாம்தான் - இந்த பூமிதான் சுழன்று சுழன்று, அவனிடமிருந்து வேறு வேறான பலனை, வேறு வேறான நிலையில், வேறு வேறான நேரத்தில் பெற்றுக் கொள்கிறோம். சூரியன் இருந்த இடத்தை விட்டு அசைவதில்லை. தனியாக ஒன்றும் செய்வதில்லை. அதே போல்தான் இந்த zodiac எனப்படும் வான் வெளி மண்டலத்தை நாம்தான் வெவ்வேறு நேர- கால- நிலையிலிருந்து பார்த்து, சூரியனிடமிருந்து வெவ்வேறான கிரணங்களை அனுபவித்தது போல, நம் நிலைக்கு ஏற்ப, வெவ்வேறான பலன்களை அனுபவிக்கிறோம். அவை என்னென்ன என்று சொல்வதுதான் ஒளியியல் எனப்படும் ஜ்யோதி- இஷம்.

இதைப் பற்றி முதன் முதலில் கூறியவர் நான்முகப் பிரமன். அவர் உபதேசித்த கருத்துகள் 'பிரம்ம ரிஷி சம்வாதம்' என்று சமஸ்க்ருதத்தில் இருக்கின்றது. சமீபத்தில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு. 'பிரம்ம ரிஷி வாக்கியம்' என்னும் பெயரில் தற்சமயம் கிடைக்கிறது. அவரையும் சேர்த்து, 18 மகரிஷிகள் 'ஜோதிட ப்ரவர்தகர்கள்', (ஜோதிட சாத்திரத்தைத் தோற்றுவித்தவர்கள்) என்று சொல்லப்படுகிறார்கள். இவர்கள் தத்தமது பெயரால் உருவாக்கிய சமிஹிதைகளில் சொன்ன கருத்துகளைப் பல புராணங்களிலும் காணலாம்.

முந்தைய கட்டுரையில் சொன்னதுபோல பல கடவுளர்களும் தத்தமக்கென்று கொண்டுள்ள பணிகளை (jurisdiction or portfolio) தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொள்ள ஜோதிடம் உதவுகிறது. பிரபஞ்சத்தின் இயக்கத்தையும், அதை இயக்கிக் கொண்டிருக்கும் கடவுளர்களைப் பற்றியும் சொல்வதாலும், ஜோதிடம் என்பது 'வேத புருஷனின் கண்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஜோதிடத்தின் பயனைப் பற்றிய இந்த முன்னுரையுடன், நான்முகப் பிரமன் கூறும் முக்தி பற்றிய கருத்து என்ன என்று பார்ப்போம். அவர் தந்துள்ள 'பிரம்ம ரிஷி வாக்கியம்' என்னும் உபதேசத்தில் ஒரு விசேஷம் என்னவென்றால், 73 யோகங்களைச் சொல்லி அவற்றுக்கான முன் பிறவிக் காரணத்தையும் கூறுகிறார். என்ன செயல் செய்தால் மறு பிறவியில் என்ன பயன் கிட்டும் என்று இவை தெளிவாக்குகின்றன. மும்மூர்த்திகள், அவர்தம் தேவியர் ஆகியோரை வணங்குவதால் என்ன பயன் என்றும் பிரம்மா சொல்கிறார்.

அவற்றுள் மும்மூர்த்தி பற்றிய குறிப்புகள், முக்தி பற்றி விவரிக்கின்றன. அவரது கூற்றுப்படி மும்மூர்த்திகளுமே முக்தியைத் தரக் கூடியவர்கள்.

**மும்மூர்த்திகளும் முக்திக்கு சாதனம்**

**சீகண்ட யோகம்**



ஒருவன் சிவனடியார்களைத் துதித்து, அவர்களுக்கு வேண்டிய அனைத்து உபசாரங்களையும் செய்து வந்தால், மறு பிறவியில், சீகண்ட யோகத்தில் பிறந்து, ருத்ராக்ஷம் தரித்து, திருநீறு பூசி, அனவரதமும் சிவத் தியானத்தைச் செய்து, சைவ சித்தாந்தப்படி விரதங்களை அனுஷ்டித்து, சாதுக்களை உபசரித்து, சிவனையே முழுமுதல் கடவுளாகக் கொண்டு, மக்களால் மகாத்மா என்று துதிக்கப்பட்டு, மறு ஜன்மம் இல்லாத சிவபதம் அடைவான்.

லக்னாதிபதி, சூரியன், சந்திரன் ஆகியோர் கேந்திர, திரி கோணங்களில் ஆட்சி, உச்சம், நடப்பாக இருந்தால் அது சீகண்ட யோகம் ஆகும்.

**ஸ்ரீநாத யோகம்**



ஒருவன் நாராயணனையே முழு முதல் கடவுளாகக் கொண்டு, வைணவ அடியார்களை நன்கு உபசரித்து, அவர்களுக்குத் தேவையான சேவைகளைச் செய்து வந்தால் மறு பிறவியில் ஸ்ரீ நாத யோகத்தில் பிறந்து, நாராயணின் திருச் சின்னங்களைத் தரித்து, நாராயணன் ஒருவனையே தியானித்து, நல்ல குடும்பம், மனைவி, மக்கள், செல்வம் பெற்று அனைவராலும் கொண்டாடப் பட்டு, மறு ஜன்மம் இல்லாத பரமபதம் அடைவான்.

களத்ரகாரகனான சுக்கிரனும், பாகியாதிபதியான 9 -ஆம் வீட்டு அதிபதியும், புத்திர காரனான புதனும் லக்கினத்திற்கு கேந்திர, திரி கோணங்களில் ஆட்சி, உச்சம், நடப்பாக இருந்தால் அது ஸ்ரீ நாத யோகம் ஆகும்.

**விருஞ்சி யோகம்**



ஒருவன் வேதம் கற்ற பிராமணர்களைப் போஷித்து, வைதீக காரியங்களுக்கு உறுதுணையாக இருந்தால், மறு பிறவியில் விருஞ்சி யோகத்தில் பிறந்து, பிரம்ம ஞானமும், அறிவும் பெற்று, நல்ல குடும்பம், மனைவி, குழந்தைகளைப் பெற்று, சிறந்த சீடர்களைப் பெற்று, ச்ரேஷ்டன் என்று பெயர் பெற்று, பிரம்ம தேஜசுடன் ஜொலித்து, மறு ஜன்மம் இல்லாத பிரம்ம லோகம் அடைவான்.

குரு, சனி, லக்னாதிபதி ஆகியோர் லக்கினத்திற்கு கேந்திர, திரி கோணங்களில் ஆட்சி, உச்சம், நடப்பாக இருந்தால் அது விருஞ்சி யோகம் ஆகும்.

இந்த மூன்று யோகங்களும், மூன்று மூர்த்திகளைப் பரப் பிரம்மமாக வழிபடுவதால், அவ்வாறு வழிபட்டவர் பிறவாமை என்னும் முக்தி நிலையை அடைவர் என்று காட்டுகின்றன. இதைச் சொன்னவர் நான்முகப் பிரமனே.மேலும் முக்திக்கு சாதனமாக ஒருவன் செய்ய வேண்டியதையும் இந்த யோகங்கள் காட்டுகின்றன.

**சிவன் - விஷ்ணுவில் யார் பெரியவர்?**

இந்த யோகங்கள் காட்டும் மற்றொரு விளக்கம் யார் பெரியவர் என்ற பேதம் சிவன், விஷ்ணுவுக்கு இருக்கிறதா என்பது. அது எப்படி என்று பார்ப்போம்.

எந்தக் கடவுளைப் பரப் பிரம்மம் என்று வணங்குகிறோமோ, அந்தக் கடவுள் மீதே உடல், பொருள், ஆவி என்று அனைத்து செயல், எண்ணங்களைச் செலுத்த வேண்டும். அப்படி, இப்படி என்று கவனச் சிதறல் இல்லாமல், முழு முனைப்புடன், இரவு பகலாக தியானம் இருக்க வேண்டும். எனவே ஒரு கடவுளை மனப் பூர்வமாக ஏற்றுக் கொண்ட ஒருவன், வேறு கடவுள் என்று கவனம் சிதறாமல் இருக்க அந்தந்தக் கடவுளே முக்கியம், அவனே உயர்ந்தவன் என்றெல்லாம் சொல்லி கவனம் கொள்ள வைத்துக் கொள்ளும் பொருட்டு பெரியோர் கூறியிருக்கின்றனர்.

சிவனை வணங்குபவர்கள், அவனையே ஒரே கடவுள் என்று கவனம் செலுத்தி பரம்பொருளாக வணங்குங்கள் என்று ஊக்குவித்திருக்கிறார்கள். அதேபோல் விஷ்ணுவே ஒரே கடவுள் என்று அவனை வணங்குபவர்கள், வேறு கடவுளர் என்று கவனம் சிதறாமல் இருக்க வேண்டும். நடுவில் இந்தக் கடவுளை வேண்டிக்கொண்டேன், அந்தக் கடவுளை வேண்டிக் கொண்டேன் என்றால், அந்தந்தக் கடவுளர் தரும் நன்மைகளில் நாட்டம் வருகிறது என்றும் அல்லது, பரப் பிரம்மனையே அடைய வேண்டும் என்ற சிந்தையிலிருந்து விலகி, தோன்றும் உலகிலுள்ள பிற பயன்களை மனம் நாடுகிறது என்றும் ஆகி, தீவீர வழிபாட்டை நீர்க்கச் செய்து விடும். இந்தக் கோட்பாடுகள், முக்தி மார்க்கத்தில் செல்பவர்களுக்குத் தேவை.

முக்தியில் நாட்டம் இல்லாதவர்கள் வாழ்க்கைத் தேவைகளுக்கு ஏற்றபடி, எந்தெந்த தெய்வங்கள் எந்தெந்த பலன்களுக்கு தேவதையோ, அந்தந்த தெய்வங்களை வணங்கிக் கொள்ளலாம். அல்லது மனம் விரும்பும் தெய்வங்களை வணங்கிக் கொள்ளலாம்.

இந்த விஷயத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் 'மறந்தும் புறம் தொழா மாந்தர்கள்'. அவர்கள் தீவீர முக்தி சிந்தனையைக் கொள்கையாகக் கொள்கிறவர்கள். இன்றைக்கு அவர்கள் எல்லோருமே அப்படி என்று சொல்ல முடியாது, ஆயினும், முக்தி மார்க்கத்தை நாடுபவர்கள், இன்னும் இருக்கிறார்கள். 'நாராயணனே நமக்கு' என்று தீவீர நாட்டம் கொள்வதால், அவர்கள் கொள்கை தவறல்ல. அவர்கள் பிற கோயில்களுக்குப் போகாததால், அவர்களுக்கு துவேஷம் என்று சொல்வது சரியல்ல.

அதேபோல், 'சர்வம் சிவ மயம்' என்று எவன் ஒருவன் சிவ பக்தியில் முக்தி பெற விரும்புகிறானோ, அவன் பிற தெய்வங்களை நாடக் கூடாது.
அதேசமயம், பிற தெய்வங்களை துவேஷிக்கவும் கூடாது. பிற தெய்வங்கள், தான் வணங்கும் தெய்வத்திற்குக் குறைந்தவை என்றும் எண்ணக்கூடாது. அது ஏன்

என்று உணர சாதாரண லாஜிக் போதும். அவனே எங்கும் பரவிய பரம் பொருள் என்றால், பிற தெய்வங்களிலும் இருப்பவன் அவன்தானே? அப்படி என்றால், பிற தெய்வங்கள் எப்படிக் குறைந்தவை ஆகும்? அப்படி அவை குறைந்தவை என்று சொன்னால், இவன் முழு முதல் என்று வணங்கும் அந்தத் தெய்வமும் குறைந்தது என்றாகுமே?

இதைச் சுட்டிக் காட்டும் வண்ணம் கீதையில் கண்ணன் கூறுகிறான். (7-16). *நான்கு விதமானவர்கள் இறைவனை வழிபடுகின்றனர்.*

- செல்வத்தை வேண்டி வழிபடுகின்றனர்.
- துன்பத்திலிருந்து விடுபடவேண்டி வழிபடுகின்றனர்.
- வேறு சிலர் இந்த இறைவன் எப்படிப்பட்டவன் என்று ஆச்சர்யப்பட்டு அவனைப் பற்றி அறிய ஆவல் கொண்டு வழிபடுகின்றனர். (அப்படிப்பட்டவரை ஜின்ஞாசு என்பர்.)
- மெய்ஞானம் பெற்ற ஞானியும் வழிபடுகிறான்.

இப்படிச் சொல்லிவிட்டு, கண்ணன் சொல்கிறான், இவர்கள் எல்லாருமே சிறந்தவர்கள் என்றாலும், இவர்களுள் ஞானிதான் எனக்குப் பிரியமானவன். ஏனென்றால், என்னுடைய உண்மையான சொரூபம் இவனுக்குத்தான் தெரியும். **“வாசுதேவம் சர்வம் இதி’** - எல்லாவற்றுக்குள்ளும் வசிப்பவன் வாசுதேவன் என்னும் நானே என்று என் சுய ரூபத்தை இவன் அறிவான், அதனால் இவனும் என் ரூபத்தில் இருக்கிறான் என்று கண்ணன் சொல்லும் கீதை நமக்குப் பிரமாண நூல்.

எந்த ரூபத்தை ஒருவன் முக்தி மார்க்கத்தில் வணங்கினாலும், அந்த ரூபத்தில் உள்ள பரம் பொருள்தான் அனைத்து தெய்வங்களிலும், அண்ட சராசரங்களிலும் உள்ளான் என்று ஆத்ம பூர்வமாக உணர்வதே சரியான மார்க்கம். இந்த மார்க்கத்தில் ஒருவன் நிலைத்திருக்கும்போது, கவனச் சிதறல் கூடாது என்ற நோக்கத்தில் பெரியோர் சொன்னவை, சமயச் சண்டைகளுக்கு வழிகோலி விட்டன.

முக்தியில் நாட்டமுள்ளவர்களானாலும் சரி, அப்படிப்பட்ட நாட்டமில்லாதர்களும் சரி, பிற தெய்வங்களைக் குறைத்துச் சொல்லுதல் என்பது - ஜோதிட பாஷையில் சொல்வதானால் - பாவ கர்மாவை உண்டு பண்ணும். அப்படிப்பட்ட கதைகளைப் பற்றிப் பேச ஒருவர் விரும்பினால், கவனமாகக் கையாள வேண்டும். அதனால் வரக்கூடிய பிற தெய்வ நிந்தனையும், அதனால் புண்படும் பக்தனின் அவதியும், கர்மாவை உண்டு பண்ணக்கூடியவை. அன்றைக்கு அவர்கள் சொல்லவில்லையா என்றால், முக்தி மார்க்கத்திற்குச் சொன்னார்கள். முக்தியில் நிலை பெற்றவன் அப்படிப் பேசலாமே என்றால், உண்மையிலேயே முக்தியில் நிலைபெற்றவன், பரம் பொருளின் சொரூபத்தை உணர்ந்திருப்பான். அவன் அப்படிப் பேச மாட்டான்.

**நான்முகப் பிரமன் தரும் முக்தி**



முக்தி மார்க்கத்திற்கு சிவன், விஷ்ணு ஆகிய இரண்டு கடவுளர்களையும் எவ்வாறு வழிபட வேண்டும் என்று மேற்சொன்ன யோகங்கள் காட்டுகின்றன. ஆனால் நான்முகப் பிரமன் விஷயம் அப்படிச் சொல்லப்படவில்லை. இருப்பதிலேயே, நான்முகன் பக்திதான் எளிதானது. வேதத்தைப் போற்றுதலும், வேதம் ஓதுதலை வளர்த்தலும், வேதம் ஒதுவோரை நன்முறையில் காத்தலும், அவர்களுக்குச் சேவை புரிதலும் பிரமனுக்குச் செய்யும் பக்தி என்று சொல்லப்பட்டுள்ளது.

ஒவ்வொரு கல்பத்திலும் வேதத்தை நினைவுக்குக் கொண்டு வந்து உலகைப் படைத்து, வேதத்தை நிலை நிறுத்துபவன், நான்முகப் பிரமனாக இருக்கவே, வேதத்தைப் போஷித்தலே முக்திக்கு வழி என்றாகிறது. நான்முகப் பிரமனே வேத உருக் கொண்டவன் என்றும் ஆகிறது. அதனாலும் அவனுக்கென்று தனிக் கோயில் இல்லாமல் இருக்கலாம். அதனாலும், ஒவ்வொரு உற்சவத்திலும், முதலில் வேத கோஷம் செய்துகொண்டு கற்றோர் செல்லவேண்டும். அவர்களைப் பின்தொடர்ந்து தான் மற்றோர் செல்வர்.

வேதத்திற்குத் தரும் முதல் மரியாதை, படைத்த பிரமனுக்குச் செய்யும் மரியாதை. அதுவே அவனை வணங்குதலுக்கு ஒப்பாகும். இடை விடாது அதைச் செய்துக் கொண்டு, வேதம் தழைக்க உதவுபவன், நான்முகப் பிரமனது அருளால் முக்தி அடைவான். இதில் தமிழன், வேறு நாட்டவன் என்றெல்லாம் இல்லை. எவனொருவன் வேதம் தழைக்க உதவுகிறானோ அவன் முக்தி அடைவான். வேதத்தையும், அது பரப்ப உதவும் சமஸ்க்ருதத்தையும் வெறுக்கும் திராவிடத் தலைவர்கள் எப்பேர்பட்ட அறிவிலிகள் என்று இதிலிருந்து தெரிகிறது. இவ்வளவு எளிய வழியை அழித்துவிட்டார்களே!

**தோன்றும் பிரபஞ்சத்தில் முக்தன் நிலை**

மும்மூர்த்திகள் மூலமும் முக்தி கிடைக்கும் என்ற கருத்தை மெய்ப்பிக்கும் வகையில் பல முக்தர்கள், சித்தர்கள் வரலாறுகள் இருக்கின்றன.

**முக்தி பெற்ற இவர்கள் எங்கே இருக்கிறார்கள்?**

இதைப் பற்றி ஜைமினி, பாதராயணர் போன்றோர் விவாதித்த கருத்துகள் பிரம்ம சூத்திரங்களாக உள்ளன. மறு பிறவி என்னும் கர்மப் பிணைப்பிலிருந்து இந்த முக்தர்கள் விடுபட்டு விடுகிறார்கள். ஆனால் நான்முகப் பிரமனின் 100 வருட ஆயுளாக இருக்கும் இந்தத் தோன்றும் பிரபஞ்சத்தின் கால் பகுதியைவிட்டு இவர்களால் வெளியேற முடியாது என்று பிரம்ம சூத்திரம் கூறுகிறது. நான்முகப் பிரமன் இருக்கும் பிரம்ம லோகத்தில் இவர்கள் நிலை பெற்று, அந்த நான்முகனின் ஆயுள் முடியும்போது அவனுடன், இந்தச் சக்கரத்தை விட்டு வெளியேறி, பிரபஞ்சத்தையே தன் கருவில் தாங்கும் பரம் பொருள் என்னும் அந்தப் பிரம்மனிடம் (Supreme Brahman) லயிப்பர்.

இந்தக் கால் பகுதி பிரபஞ்சத்தில் முக்தி அடைந்த உயிர்கள், எங்கு வேண்டுமானாலும் சஞ்சரிக்கலாம், எதை நினைத்தாலும் சாதிக்கலாம். படைத்தல் தொழில் தவிர, பரம் பொருள் செய்யும் எந்தச் செயலையும் செய்யக்கூடிய நிலையையும் ஆற்றலையும் அவர்கள் பெறுகிறார்கள்.
இதோ வேதம் காட்டும் பிரபஞ்சத்தைப்பாருங்கள்...




*நாம் பயணிக்கும் பிரபஞ்சம் இது*

முக்தர்கள் இந்தப் பிரபஞ்சத்தில் எங்கு வேண்டுமானாலும் செல்லலாம் என்றால் என்ன அர்த்தம்? பல்வேறு காலக் கட்டங்களில் தோன்றிய அகத்தியரால் எப்படி அப்படித் தோன்ற முடிந்தது என்று இது காட்டுகிறது அல்லவா? அவர் என்றோ முக்தி அல்லது சித்தி அடைந்திருப்பார். வெவ்வேறு யுகங்களில் தேவை ஏற்படும்போது, அப்பொழுதே அப்படியே அவரால் தோன்ற முடியும். கருவில்

பிறந்து, வளர்ந்து வர வேண்டிய அவசியமில்லை. எங்கெங்கு தேவையோ, அங்கங்கு தோன்றி, செய்ய வந்த செயலைச் செய்திருப்பார். ஆனால் கர்மப் பிணைப்பு அவருக்கு ஏற்படாது. அதுதான் இந்த முக்தி தரும் விசேஷச் சலுகை.

இறைவன் திடீரென்று தோன்றி ஆட்கொண்டான் என்றெல்லாம் புராணங்கள் சொல்கின்றனவே, அவை கட்டுக்கதை அல்ல என்றும் இது காட்டுகிறது. முக்தர்களாலேயே, இஷ்டப்படி வந்து போக முடியும் என்றால், இறைவன் வருவதில் என்ன அதிசயம்? அது எப்படி கட்டுக் கதையாக இருக்கும்?

அவ்வாறே, நாரதரும் வந்து போய்க் கொண்டு இருக்கிறார். பல ரிஷிகளும், பெரியோரும் நம் கண்ணில் பட முடியும் - நாம் அந்த அளவு ஆத்ம சாதனை கொண்டிருந்தால். இதன்படி ஆதி சங்கரரோ, அல்லது இராமானுஜரோ மீண்டும் தோன்றுவதற்கு வாய்ப்புண்டு. கர்ம வினையால் அவர்கள் பிறக்க மாட்டார்கள். உலக நன்மைக்காக, ஆண்டவன் ஆஞ்ஞையால் அவர்கள் அவதரிப்பார்கள்.

வெவ்வேறு காலக் கட்டத்தில் பிரபந்தங்களைப் பாடிவிட்டுப் போய் விட்டார்கள் ஆழ்வார்கள். நம்மாழ்வார் அருள, நாத முனிகள் அவற்றைப் பெற்றாரே, அது எப்படி - என்பதும் இந்த அமைப்பில் தெரிகிறது. இன்றும் நாத முனிகள் அளவுக்கு ஒருவன் தியானம் செய்தால், அவனுக்கு முன் நம்மாழ்வார் தோன்ற முடியும். திவ்யப் பிரபந்தத்தை எடுத்துக் கொடுக்க முடியும்.

இதையெல்லாம் சொன்னோம் சரி, இந்த மும்மூர்த்திகள் தவிர வேறு தெய்வங்களைப் பூஜிப்பவர்களுக்கு முக்தி கிடைக்காதா? பிரம்ம சூத்திரம் அதையும் சொல்கிறது.

**பிற மதம், பிற தெய்வம் மூலம் முக்தி உண்டா?**

ஒருவன் எதை உபாசிக்கிறானோ அதை அடைவான். இதை ‘தத்க்ரது’ என்று பிரம்ம சூத்திரம் கூறுகிறது. பரம் பொருள் என்னும் அந்த முழு முதற் கடவுளைத் தியானித்து மும்மூர்த்திகளில் ஒருவரை உபாசித்தால் முக்தி கிடைக்கும். வேத மதத்தில் பிற மூர்த்திகளை உபாசித்தாலும், முடிவில் இந்த மும்மூர்த்திகளுக்குத்தான் ஒருவன் செலுத்தப்படுவான்.

அவையெல்லாம் பரிவார தேவதைகள். சிவன் அல்லது விஷ்ணுவுடன் சேர்பவர்கள். அவர்கள் மூலம் முக்திக்கு வழி பிறக்கும்.



ஆனால் படைக்கப்பட்ட உலகில் தோன்றின உயிர்களை முழு முதற் கடவுளாக எண்ணுபவர்கள் அந்த உயிர்களையே அடைவார்கள். இங்கே வைணவ சம்பிரதாயத்தில் அனுசரிக்கப்படும் ஒரு நம்பிக்கையைச் சொல்ல வேண்டும். ஆசார்யர் இராமானுஜர் சம்பந்தம் இருப்பவர்கள் அனைவருக்குமே முக்தி உண்டு என்று கடவுளே கொடுத்த உறுதிமொழி இந்தச் சம்பிரதாயத்தில் உண்டு. அதனால் ஆசாரியனுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. முக்திக்குத் தேவையான தியானம் இல்லாவிட்டாலும்கூட, முக்தரான இராமானுஜரைத் தியானிப்பதால், முன் கூறிய 'தத்க்ரது' கோட்பாட்டின்படி, வைணவர்கள் இராமானுஜரை அடைந்து, தாமும் முக்தி அடைவர். தெய்வம் கொடுத்த உறுதிமொழி இப்படி நடைமுறைப்படுத்தப்படும்.

**ஆனால் பிற மதங்களில் இவ்வாறு அல்ல.**

அம்மதங்களில் தெய்வம் என்று போற்றப்படுபவர்கள், ஆன்மிக விழிப்படைந்த உயிர்களாக இருந்தாலும், முழு முதற் கடவுளான பிரம்மத்தை உபாசிக்காமையால், முக்தி அடைந்தவர் இலர். எனவே அவர்களுக்கு மறு பிறவி உண்டு. அதுவரை அவர்களை உபாசித்த உயிர்களும் அவர்களிடமே நிலைத்து, மீண்டும் அவர்கள் பிறக்கும்போது பிறக்க வேண்டும். அல்லது ஒரு கல்பம் முடிந்து பிரளயம் வந்து படைக்கப்பட்ட எல்லாம் அழியும்பொழுது அவையும் அழிந்து மீண்டும் பிறக்க வேண்டும். இதை பிரம்ம சூத்திரம் வாயிலாக அறிகிறோம்.

இன்றைக்குப் பிற மதங்கள் இருக்கின்றனவே அவர்களுக்கு வேறு கதியில்லையா என்று கேட்டால், என்னிடம் இரண்டு பதில்கள் இருக்கின்றன.

ஒன்று ஜோதிடம் வாயிலாக அறிவது. நன்னடத்தை, ஒழுக்கம், தர்மத்தில் நிலைத்தல், முக்கியமாக ஆபத்தில் இருப்பவனுக்கு உதவுதல் அல்லது கருணையோடு இருத்தல் இவை ஒருவனிடம் இருந்தால், அவன் வேறு மதத்தினனாக இப்பிறவியில் இருந்தாலும், அவனை வேத மத நம்பிக்கை கொண்டவனாகவும் அல்லது இந்து மதத்தைச் சேர்ந்தவர் வீட்டில் பிறக்கும்படியும் அல்லது தானே ஆத்ம ஞானம் தேடி, கங்கையில் நீராடி, பிரம்மனைத் தேடும்படியாகவும் மறு பிறவி அமையும். இந்து மத வழியில்தான் முக்தி அடைய முடியும்.

மற்றொன்று, இந்து மதத்தைக் காப்பியடித்து இப்பொழுதெல்லாம் 'முத்தொழிலோனே நமஸ்காரம்' என்று கிறிஸ்துவுக்கு நமஸ்காரப் பாட்டு பாடுகிறார்களே, கிறிஸ்துவை வேத முதல்வன் என்றாக்கிக் கும்பிடுகிறார்களே, இது எங்கே கொண்டுபோய் விடும்?

இவர்கள் நம்மைக் காப்பியடித்து நம்மைப் போல ஆக முயல்கிறார்கள்.

ஆனால் இங்கே இருப்பவர்கள், நம் விரத நாள்களில் வயிறு முட்ட உண்டுவிட்டு, அவர்கள் விரதத்தை முடித்துவைக்க, கஞ்சி குடிக்கிறார்கள்.

என்ன அபத்தம் இது?

காப்பியடித்தாலும், அல்லது உல்டாவாக செய்தாலும், அதனதன் பலன்களே வந்து சேருமே தவிர, முக்திக்கு ஆதாரமான ஆத்ம ஞானம் வராது.

***ஆத்மா என்பதையே ஏற்றுக் கொள்ளாத அந்த மதங்களைப் பின்பற்றினால் ஆத்ம ஞானம் எங்கிருந்து வரும்?***

ஆத்மா என்ற ஒன்று இருப்பதையே ஒருவன் அறியவில்லை என்றால் ஆத்மாவுக்கு விடுதலை என்னும் முக்தியை ஒருவன் எப்படி அடைய முடியும்?

இந்த நிலையில், ஒரே ஒரு வழி தான் புலப்படுகிறது. பிற மதத்தில் இருப்பவருக்கு அந்த மதக் கடவுளிடம் ஆழ்ந்த நம்பிக்கையும், பற்றும் இருந்தால், அந்த பற்று பின்னுமொரு பிறவியிலும் தொடரும். அது ஆத்ம ஞானத்தைத் தேடும்படி, பின்னொரு பிறவியில் செலுத்தும்.

அவ்வாறு ஆத்மாவைத் தேடினால் அவன் வேதாந்தி. இன்றைய மொழியில் அவன் ஹிந்து!

---

# பிரபஞ்சவியலில் உடுக்கை ஒலியும் கொப்பூழ் தாமரையும்

எண்ணிலடங்கா பிரபஞ்சங்கள் சுழல் பாதையில் சென்று கொண்டிருக்கின்றன. அவை கால் பங்கு தோன்றும் நிலையிலும், (manifest form) மீதி முக்கால் பங்கு தோற்றம் இல்லா நிலையிலும் இருக்கின்றன என்றும் பார்த்தோம். இவை அனைத்தும் பாதுகாப்பாக இருக்கின்றன என்பதை சக்கரத்தாழ்வாராகவும், இவை அனைத்திலும் யோகேஸ்வரனாக அந்தப் பரம் பொருள் இருக்கின்றான் என்பதை யோக நரசிம்ஹர் நிலை கொண்டிருப்பதிலும் காணலாம்.



முடிவில்லா இப் பிரபஞ்சங்கள் எந்நேரமும் இயக்கத்தில் இருக்கின்றன என்பதை நடராஜர் உருவில் காண்கிறோம். ரிக் வேதத்தில் சொல்லப்படும் பிரபஞ்சப் படைப்பு பற்றிய பாடலானது இருளிலும், தோற்றமில்லா நிலையிலும் தொடர்ந்து இந்த இயக்கம் நடந்து கொண்டிருப்பதைக் கூறுகிறது. தோன்றும் பிரபஞ்சத்திலும் இயக்கம் நடக்கிறது. தோற்றம் இல்லாப் பிரபஞ்சத்திலும் (unmanifest) நம் அறிவுக்கு எட்டாத நிலையில் இயக்கம் தொடர்ந்து கொண்டிருக்கிறது. இந்த இயக்கம் அணுவிலும் காணப்படுகிறது. பிரம்மாண்டத்திலும் காணப்படுகிறது. தோன்றும் பிரபஞ்சத்திலும், ஜடப்

பொருளிலும், அணுவுக்குள் அணுவாகவும் ஓயாமல் இயங்கிக்கொண்டே இருக்கிறது- என்னும் இவை அனைத்தையும் காட்டுவது நடராஜத் தத்துவமே.

இடைவிடாத இயக்க நிலையை உணர்ந்துள்ள அறிவியலார், அந்த இயக்கத்தை நடராஜர் உருவில் என்றோ நாம் அறிந்துள்ளோம் என்பதை ஆமோதித்து, ஜெனீவாவில் உள்ள நுண்ணணு ஆராய்ச்சி மையமான CERN கழகக் கட்டடத்தின் முன்புறம் இரண்டு மீட்டர் உயரமுள்ள நடராஜர் சிலையை நிறுவியுள்ளனர். உருவ வழிபாட்டினை இகழ்ச்சியாகப் பார்க்கும் இன்றைய உலகில் அறிஞர்களும், அறிவியலாரும் இவற்றின் பின் அமைத்துள்ள அரும் பெரும் கருத்துக்களை உணர ஆரம்பித்துள்ளனர் என்பதற்கு இது ஒரு சாட்சி.

ஏனோ தானோவென்று ஏற்பட்டதல்ல இந்த இந்து மதம். இந்த மதத்தின் ஒவ்வொரு கருத்துக்கும் பின் சீரிய பலப் பல உண்மைகள் பொதிந்துள்ளன. அறிவியலார் அறிந்துள்ளதோ, முடிவில்லாத இயக்கம் ஒன்றை மட்டுமே. ஆனால் அந்த இயக்கத்தில் நடராஜர் அறிவிக்கும் படைப்புக் கோட்பாடுகளை அவர்கள் அறிந்திலர். அவை என்னவென்று பாப்போம்.

## உடுக்கை எழுப்பும் ஒலி

நடராஜரது உடுக்கை ஒலியில் படைப்பு ஆரம்பமாகிறது. உடுக்கை எழுப்பும் ஒலி ஓங்காரமாகும் . தோற்றமில்லா நிலையிலிருந்து ஓடிக்கொண்டே வரும் பிரபஞ்சம், ஓங்கார ஒலியால் மாறுபாடு அடைந்து, தோன்றும் பிரபஞ்சமாக, (manifest Universe) அதாவது படைக்கப்பட்டதென உருமாறுகிறது. இன்றைய அறிவியலில், படைப்பு என்பது பெரும் வெடிப்புச் சிதறலாகவோ (Big Bang) அல்லது கோர்க்கப்பட்ட அமைப்பிலோ (String theory) இருக்கலாம் என்பவையே அனுமானங்கள். ஆனால் நடராஜர் காட்டும் படைப்பு ரகசியம் வேறு. அது ஓங்காரப் பிரம்மத்திலிருந்து ஆக்கம் உண்டாகிறது என்று காட்டுவது.



ஓங்காரப் பிரம்மத்தில் அகரம் முதல் அக்ஷரம். ஓங்கார ஒலியின் தொடர்ச்சியாக, பல்வேறு கூறுகளாக இருப்பவை பீஜாக்ஷரங்கள். அவை ஒவ்வொன்றும் ஒவ்வொருவித இயல்பையும், சக்தியையும் கொண்டவை. அவற்றைப் பகுத்து அந்தந்த சக்திகளை ஒவ்வொரு கடவுளாக, அவரவர் மன,

குண, ஆன்மிக நிலைக்கு ஏற்ப வழிபட உதவுமாறு அமைத்துள்ளனர் வேத ரிஷிகள். மந்திர, யந்திர, தந்திர வழிகள் என இன்னின்ன சக்திகளை அடைய, இன்னின்ன வழிகள், இன்னின்ன பீஜாக்ஷரங்கள் என்று அமைத்துள்ளனர். இவை யாவுமே எங்கும் வியாபித்துள்ள பரம் பொருளின் உட்-கூறுகள்.

இதை இங்கே சொல்வதற்கு இன்னொரு காரணமும் இருக்கிறது. தமிழ்ப் பற்று என்ற பெயரில் சமஸ்க்ருதத்தை இகழ்வது என்ற கலாசாரம் தமிழ் நாட்டில் இருக்கிறது. சமஸ்க்ருதத்தில்தான் அர்ச்சனை செய்ய வேண்டுமா? தமிழில் செய்யக் கூடாதா, தமிழில் செய்தால் இறைவனுக்குப் புரியாதா, அவன் தமிழில் கேட்க மாட்டானா, என்றெல்லாம் வாய்க்கு வந்தபடி பேசுகிறார்கள்.

எந்த மொழியில் வேண்டுமானாலும் இறைவனை நினைக்கலாம், வணங்கலாம், துதிக்கலாம். அவரவர் விருப்பம். இன்னும் சொல்லப்போனால் மனத்தின் மூலமாகத்தான் உள்நோக்கி அவனை நினைக்கிறோம். ஆனால் கோயில் விஷயம் வேறு. கோயில்களில் மந்திர, யந்திர அல்லது தந்திர வழியில் ஆதார பீஜாக்ஷரங்களை நிலை நிறுத்தியிருப்பர். மேலே கூறப்பட்ட அடிப்படை விஷயங்களைப் பாருங்கள். தெய்வங்கள் தொடங்கி, கிரகங்கள் வரை பீஜாக்ஷரத்தால் குறிக்கப்பட்டுள்ளன. அவை அவ்வவற்றின் ஆதார சுருதி. அந்த ஆதாரத்தின் அலை வரிசையை அடையுமாறு அமைக்கப்பட்டவைகளே மந்திரங்கள், உச்சாடனங்கள் முதலியன. அப்படி அமைந்த அலைவரிசையில் அர்ச்சனை நடந்தால் ஆதாரத்தைப் போய் அடையும். அங்கே பார்க்க வேண்டியது என் மொழியா உன் மொழியா என்பது அல்ல. எந்த அலை வரிசை என்பதுதான் முக்கியம். அது அமைந்த மந்திரம் மற்றும் அர்ச்சனைதான் முக்கியம். அது இல்லாமல், தான் விரும்பும் மொழியில்தான் சொல்ல வேண்டும் என்றால், அதற்கு, கோயிலுக்குப் போய்தான் சொல்ல வேண்டும் என்று இல்லை. வீட்டிலேயே சொல்லிக் கொள்ளலாம். எனவே அந்தந்த கோயில்களில் வழி வழியாக இருந்து வரும் ஆதாரமான வழிமுறைகளைச் சிதைக்கக்கூடாது.

மீண்டும் உடுக்கை ஒலிக்கு வருவோம். ஒலி அலைகள் ஏற்படுத்தும் அதிர்வுகளால் படைத்தல் (Creation) ஆரம்பமாகிறது என்று உடுக்கை ஒலி உணர்த்துகிறது. இப்படி இருக்கலாம் என்று அறிவியலாரில் ஒரு சாரார் இப்பொழுது எண்ணத் தொடங்கியிருக்கின்றனர். படைக்கும் நேரத்தில் நடராஜர் அடித்த உடுக்கையின் ரீங்காரம், தோன்றும் பிரபஞ்சம் முழுவதையுமே ஆக்ரமிக்கும். ஓங்கார ரூபமாக அவனே எங்கும் வியாபித்துள்ளான் என்று பிரமாண நூல்கள் சொல்வதால் அண்டம் முழுவதும் அவ்வொலி- அந்த ஓங்கார ஒலி இருக்க வேண்டும். எந்தச் செயலைச் செய்யும் முன்னால், நம்மைச் சுற்றி என்றென்றும் இருக்கும் அந்த ஓங்கார ஒலியை உச்சரித்து, அதன் மூலம் அந்த ஓங்கார ரூபியை நம் செயலுக்கு அதிகாரியாகவும், சாட்சியாகவும் வைக்கிறோம்.

ஓங்காரமே எங்கும் வியாபித்துள்ளது என்பதற்கு சாட்சி என்ன என்றால், இப்படியும் சொல்லலாம்:

அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் உள்ளது என்று நம் முன்னோர்கள் சொன்னார்கள். அண்டத்தில் பிரம்மாண்டமாக, இடைவிடாத இயக்கத்துடன் நடராஜர் உருவில் பிரபஞ்சங்கள் அடுத்தடுத்து சுழன்று கொண்டிருப்பதைப் போல, அணுவிலும் வட்டப் பாதையில் இடைவிடாமல் இயக்கம் நடந்து கொண்டுருக்கின்றது.

ஓங்காரமும் அப்படியே. அண்டத்தில் எங்கும் ஓங்காரம் ஓடிக்கொண்டிருந்தால், பிண்டத்திலும் அது ஒலித்துக் கொண்டிருக்க வேண்டும் அல்லவா? ஆம். ஒலித்துக் கொண்டிருக்கின்றது. இது உண்மையே என்று தெரிந்து கொள்ள நம் உடலில் ஓடும் இயக்கமான ரத்த ஓட்டத்தைக் காது கொடுத்துக் கேளுங்கள். ஸ்டெதெஸ்கோப்பை ரத்த நாளங்கள் உள்ள கை மீது வைத்துக் கவனியுங்கள். அற்புதமான ஓங்கார ஒலியே கேட்கிறது. வாழ்வாதாரமான ரத்தம் ஓங்கார ஒலியுடன் நம் உடலைச் சுற்றிச் சுற்றி வருகிறது- படைப்பின் ஆதாரமாகிய அணுத்துகள்கள் அண்டத்தைச் சுற்றிச் சுற்றி ஓங்கார ஒலியுடன் வருவதைப்போல.

இங்கே ஒரு கேள்வி எழலாம். ஒலி அலைகள் பயணிக்க ஒரு மீடியம் வேண்டுமே, ஒலி அலைகள் வெற்றிடத்தில் பயணிக்காதே என்று கேட்கலாம். அங்கும் நடராஜரது உடுக்கை ஒலி ஒரு க்ளூ கொடுக்கிறது.

எண்ணில்லாத இந்தப் பிரபஞ்சங்கள் முழுவதும் நடராஜரின் இயக்கம் ஊடுருவி இருக்கிறது என்பதை அவரது நடனம் காட்டுகிறது. அப்படி இருக்க அங்கே வெற்றிடம் எப்படி இருக்க முடியும்? வெற்றிடம் என்று நாம் நினைக்கும் பகுதியிலும் பரம் பொருள் ஊடுருவியிருக்கிறான் என்பதல்லவா வேதம் காட்டும் அறிவு? அதன்படி வெற்றிடம் என்பதே கிடையாது. வெற்றிடம் என்று நாம் நினைக்கும் பகுதியிலும் நாமும், நம் அறிவியலாரும் அறியாத ஏதோ ஒரு பொருள் இருக்க வேண்டும். (அதை இன்று அறிவியல்dark matter என்ற பெயரில் ஒத்துக் கொள்கிறது.) உடுக்கையின் ஓங்கார ஒலி அவற்றின் வழியே ஊடுருவி பல நிலைகளிலும் படைப்புக்கு உறுதுணை ஆகிறது என்பதே உடுக்கை ஒலி காட்டும் ஞானம்.

இந்த ஒலி நம் காதுக்குக் கேட்க வேண்டும் என்பதில்லை. அதைக்கேட்க வேண்டுமானால், அந்த மூலாதாரத்தை நோக்கி பக்தியோ, முக்தியோ, சித்தியோ, வித்தையோ (32 வித்தைகள் பற்றிய குறிப்புகள் வெவ்வேறு உபநிஷத்துக்களில் காணப்படுகின்றன.)– ஏதோ ஒரு வழியில் நாம் பயணிக்க வேண்டும்.

அப்படிப் பயணிக்கவில்லை என்றாலும், அந்த ஒலி அலைகள் அடைந்த பரிணாம வகைகளை இன்று நாசா (NASA) விஞ்ஞானியர் செவிமடுத்து, பேச்சிழந்து நிற்கின்றனர்.

சமீபத்திய ஆராய்ச்சிகளின் மூலம் நம் சூரிய மண்டலத்தில் இருக்கும் கிரகங்கள் 'பேசி'க் கொள்வதை செவிமடுத்துள்ளனர். ஒரு குறிப்பிட்ட அலை

வரிசையில் கிரகங்கள் ரேடியோ அலைகளை வெளிவிடுகின்றன. இவற்றைக் காதால் கேட்கும் வண்ணம் ஒலி அலைகளாக மாற்ற முடியும். அப்படிச் செய்த போது, இந்த ஓசையை ஓர் இசையாக இந்த கிரகங்கள் வெளிப்படுத்துகின்றன என்று தெரிய வந்துள்ளது. அப்படிக் கேட்ட ஒலியில், சனிக் கிரகத்தின் ஒலி பிரமிக்கத்தக்கதாக உள்ளது. அதை இங்கே கேட்கலாம்.

**நாதப் பிரம்மம்**

இசை என்று சொல்லும்பொழுது, நாதப் பிரம்மம் என்பது நினைவுக்கு வருகிறது. நாதமே பிரம்மம் என்றால், நான்முகப் பிரம்மன் வெளிப்பட்ட இடமான, தோன்றும் பிரபஞ்சத்தின் ஆரம்பத்தில் ஓங்காரம் எழும்பிய போது, நாதமும் வெளிப்படிருக்க வேண்டும் அல்லது நாதமாக வெளிப்பட்டிருக்க வேண்டும் என்றாகிறது. இதை விஞ்ஞானம் இன்னும் அறியவில்லை.

இந்த நாதப் பிரம்மம் ஏழு ஸ்வரங்களாக உள்ளது. இவை சாம வேதத்தின் ஆதார ஸ்வரங்கள். எண் வடிவிலும் இவற்றைக் குறிப்பர். அவை தரும் வெவ்வேறு ராகத்தில் கடவுளை அடையும் அலை வரிசை உண்டாகிறது. சாம கானத்தில் இறைவன் இறங்கி வருதல் அதனால் சாத்தியமாகிறது.

தோன்றும் பிரபஞ்சத்தில் அணுக்கள் பயணித்தபோது அவை ஓங்காரத்தையும், நாதத்தையும் சுமந்து கொண்டோ, அல்லது அவற்றால் செலுத்தப்பட்டோ இன்னும் இயக்கத்தில் தொடர்ந்து கொண்டிருக்கின்றன. அறிவியலாருக்கு எட்டியுள்ள Doppler Effect அவற்றுக்கிடையே இருக்கும் ஒருவித பேச்சு அல்லது நாதம் என்று கொள்ளலாம். அவற்றுக்கு அலைவரிசையும், நிறமும், வடிவும் இருக்கிறது என்பதை இன்றைய அறிவியல் மூலமே தெரிந்து கொள்கிறோம்.

இந்த அணுக்களும், அவை கொண்ட பொருள்கள் அனைத்தும் தத்தமக்கென்று பரிபாஷையைக் கொண்டிருக்கும் என்பது சாத்தியமென்று தெரிகிறது. நம்முடைய பிரதேசம் என்று பார்க்கையில் சில விஷயங்கள் முன்னோரால் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று, சாயாக் கிரகங்கள் எனப்படும். ராகு, கேது நீங்கலாக மீதி ஏழு கிரகங்களும் இந்த ஏழு ஸ்வரங்களையும் கொண்டவை என்பதே. அவற்றுக்கு நிறமும் கொடுக்கப்பட்டுள்ளது. எந்த அடிப்படையில் உருவாக்கினார்கள் என்று நமக்குத் தெரியவில்லை. ஆனால் அடிப்படை என்று ஏதோஒன்று உள்ளது என்று தெரியப்படுத்தும் வண்ணம், சில விஷயங்கள் நம் சிற்றறிவுக்குத் தென்படுகிறது.

நிறம் என்று பார்க்கையில், ஆதார நிறங்கள் பச்சை, சிவப்பு, நீலம் ஆகியவை. கிரகங்களில் இவை முறையே, புதன், செவ்வாய், சனி ஆகும்.

இப்பொழுதுதான் அதிசய ஒற்றுமை வருகிறது. இவற்றின் ஸ்வரங்கள்:

புதன் - ஸ
செவ்வாய் - ரி
சனி - ப

தமிழ்ப் பண்ணில் (ஆய்ச்சியர் குரவையில் காணலாம்) இவை முறையே குரல் (கிருஷ்ணா), துத்தம் (நப்பின்னை), இளி (பலராமன்) ஆவர்! இவற்றை ஆதாரமாகக் கொண்டுதான் பல வித இசை எழுந்துள்ளன.

இவற்றின் தெய்வங்கள் யார் என்றால் (இவை நக்ஷத்திர சூக்தம் என்று யஜுர் வேதத்தில் உளளன.)

புதன் - ஸ - த்ரிவிக்ரமன் (வாமனன்)செவ்வாய் - ரி - பூமி
சனி - ப - பிரஜாபதி (இவரிடமிருந்து உயிர்கள் உற்பத்தியாகின்றன.)

இவை மூன்றும் படைக்கப்படும் ஆதாரமான விஷயங்கள் மற்றும் அவற்றின் காப்பாக மூவுலகமும் அளப்பவன் (த்ரிவிக்ரமன்). சுருக்கெழுத்துப் போல ஆதாரமான அலைவரிசையிலும், நிறத்திலும், அக்ஷரத்திலும் இவை உள்ளன. ஆரம்பத்தில் இவை ஓங்காரத்தில் கிளம்பி, பிரபஞ்சம் விரிய விரிய இவையும் எளிய பகுப்புகளாக உருமாறி, யாருக்காக இந்த படைத்தலைச் செய்தானோ, அந்த ஜீவர்களாகிய நாம் வாழ வகை செய்துள்ள பாங்கே இவை எல்லாம்.

இதில் இன்னொரு அதிசயமும் உள்ளது.

புதனைக் குறிக்கும் கடவுள் மால் என்னும் மாயோன். மால் என்றால் மயக்குபவன் என்பது பொருள். செவ்வாயைக் குறிக்கும் கடவுள் சேயோன் எனப்படும் மால் மருகன் ஆன முருகன். மருகன் என்றால் மரபில் வந்தவன் என்று பொருள். மாலின் மரபில், அதாவது வழியில் தானும் மயக்குபவன் என்று அர்த்தம். இவர்கள் இருவருமே, சாதாரண மக்களை எளிதில் மயக்கித் தம் பக்கம் திருப்புகின்றனர். அப்படியும் மயங்காதர்களை சனீஸ்வரன் மாற்றுகின்றான்.



கிரகங்களுக்குள்ளே, சனிக்குத்தான் சனீஸ்வரன் என்று ஈசன் பட்டம் உண்டு. கிரகங்கள் எல்லாம் மக்களுக்கு நல்லது தரவென்று இறைவனிடம் தத்தமக்கென்று வரம் பெற்ற போது, சனி மட்டும் மக்களுக்குத் துன்பம் தருபவனாக தான் இருக்க வேண்டும் என்று கேட்டாராம். ஏன் அப்படி என்று கேட்டதற்கு, துன்பம் வரும் பொழுதுதான் மக்கள் இறைவனை நினைப்பர். அதனால் சர்வேச்வரனான உன்னை நினைத்துக்கொண்டே இருக்க, நான் அவர்களுக்கு அடுத்தடுத்துத் துன்பம் தரவேண்டும் என்று சொன்னாராம். தன் பெயர் கெட்டாலும் பரவாயில்லை, மக்கள் இறை பக்தியைப் பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் சனிக் கிரகம் கேட்கவே, அவருக்குப் பெருமை சேர்க்கும் வண்ணம், சனீஸ்வரன் என்று ஈஸ்வரப் பட்டத்தையும் சேர்த்து அழைக்கும்படி இறைவன் செய்தாராம்.

இதிலிருந்து எடுத்துக்கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், படைப்பின் கடைசிக் கட்டம் வரை அந்தப் பரம் பொருளை அடைய வேண்டுவதற்கான சாத்தியக் கூறுகளை இறைவன் அமைத்துள்ளான்.

**கொப்பூழ் தாமரை**

படைப்பின் துவக்கத்தில் விவரிக்கப்பட்டுள்ள மற்றொரு வர்ணனை, திருமாலின் நாபியிலிருந்து எழுந்த தாமரையில் நான்முகப் பிரம்மன் அமர்ந்து உலகத்தைப் படைத்தான் என்பது. இங்கே ஓங்காரம் வரவில்லையே, இந்த வர்ணனையும், உடுக்கை ஒலி வர்ணனையும் ஒத்துப் போகவில்லையே என்று கேட்கலாம்.



இங்கேயும் ஓங்காரம் இருக்கிறது. திருமாலின் கொப்பூழில் மலர்ந்த தாமரை, லக்ஷ்மியின் வடிவம். திருமாலின் இதயம் என்னும் தாமரையில் குடி கொண்டுள்ள லக்ஷ்மியே, தோன்றும் உலகில் தாமரையில் எழுந்தருளுகிறாள். படைப்புக் காலத்தில் கொப்பூழில் மலர்ந்த தாமரை, திருமாலின் அங்கமே. அந்த லக்ஷ்மியைப் பாடும் ஸ்ரீ சூக்தம் என்னும் ரிக் வேதப் பாடல் அவளை எல்லாப் பொருளிலும் உறைபவள் என 'ஈச்வரீம் சர்வ பூதானாம்' என்கிறது. அவளை அடைபவர் கேட்கும் ஒலி யானையின் பிளிறல் ஒலி. யானையின் பிளிறல்

ஓங்காரமாகும். யானையும் ஓங்கார ஒலியால் அவள் துதிக்கப்படுகிறாள் என்று இந்தப் பாடல் கூறுகிறது. அவள் இருக்கும் இடத்தில் என்றும் ஓங்காரம் கேட்டுக் கொண்டிருக்கும்.

இயக்கத்தைச் செலுத்திக் கொண்டிருப்பவர் நடராஜர் என்றால், படைப்புக்குள் நிழைந்து கொண்டிருக்கும் அண்டங்களுக்கு சுபிட்சத்தை வழங்கிக் கொண்டிருப்பவள் கொப்பூழ் தாமரையான லக்ஷ்மி.

உடுக்கை ஒலி கிளம்பிய அதே மூலத்தில் நான்முகப் பிரமம்னும் ஓங்காரத்தை பரப்பிக் கொண்டிருக்கிறார். வேதத்தை நினைவுக்குக் கொண்டுவந்து அதை வெளிப்படுத்துவது படைப்பின் அந்த மூலத்தில்தான். இந்த மூன்று கடவுளர்களது ஆதார ரூபத்தை ஒருங்கே வணங்கியவர் முற்காலத் தமிழர்.



மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப் பூ' போல இருந்தது மதுரை மாநகர் என்னும் பரிபாடல் இதைப் பறைசாற்றுகிறது. மதுரையை ஆண்டவன் சோம சேகரக் கடவுளை வணங்கிய பாண்டியன். அவன் ஆண்ட நாடு மாயோன் அளித்த தாமரை போன்றது. (இன்றும் மதுரை நகரம் தாமரை வடிவில்தான் இருக்கிறது). அதனால் சுபிட்சம் பெருகியது. அங்கே 'பூவினுட் பிறந்தோன் நாவினில் பிறந்த' - அதாவது பூவில் தோன்றிய நான்முகப் பிரமனது நாவில் தோன்றிய வேத ஒலியைக் கேட்டுத்தான் மதுரை மன்னனும், மக்களும் துயில் எழுவர் (கோயிலில் விடிகாலை வேத முழக்கம் நடந்தது என்று பொருள்).

ஆனால் மற்ற இரு மன்னர்களது தலை நகரங்களான வஞ்சியிலும், உறையூரிலும் கோழி கூவுவதைக் கேட்டுத்தான் துயில் எழுவர் என்கிறது இப்பாடல். சங்க காலத் தமிழர் மும்மூர்த்திகளையும் ஒருங்கே போற்றினர் என்பதற்கு இது ஒரு சான்று. சமயச் சண்டை உருவாகாத காலம் அது.

ஓங்கார ஒலியில் ஆரம்பித்த படைப்பு, மேற்கொண்டு சென்ற விதத்தை இந்தப் பிரபஞ்சவியல் எவ்வாறு விளக்குகிறது என்பதை அடுத்தக் கட்டுரையில் பார்ப்போம்.

# பிரபஞ்சம் செல்லும் பாதையும் பித்ரு காரியத்தின் அவசியமும்

கொப்பூழ் தாமரையில் அமர்ந்த நான்முகப் பிரம்மன் படைத்தலைத் தொடங்குகிறார். இந்தத் தொடக்கத்திலேயே இரண்டு விஷயங்கள் முடிவாகி விடுகின்றன. ஒன்று, ஆரம்பம் முதல் முடிவு வரை என்னென்ன, எப்படி எப்படி இருக்க வேண்டும் என்கிற ப்ரோக்ராம். மற்றொன்று, எவ்வளவு காலம் இந்த ப்ரோக்ராம் நீடிக்க வேண்டும் என்பது.

ப்ரோக்ராமை அமைத்துக் கொடுப்பது வேத அறிவு. இது அழியாத விஞ்ஞான விதிகள் கொண்ட அறிவு. எவ்வளவு முறை இந்தப் பிரபஞ்சம் அழிந்து, மீண்டும் தோன்றினாலும், இந்த அறிவைக் கொண்டு மீண்டும் மீண்டும் ப்ரோக்ராம் அமைத்துக் கொள்ளலாம். அந்த அறிவை, படைப்பின் ஆரம்ப கட்டத்தில், நாராயணன் தன் கொப்பூழில் தோன்றிய பிரம்மனுக்கு உபதேசம் செய்வதாகச் சொல்லப்படுகிறது. பிறகு எப்பொழுதெல்லாம் உலகங்கள் அழிந்து, மீண்டும் பிறப்பிக்கப்பட வேண்டுமோ, அப்பொழுதெல்லாம் இந்த அறிவை நான்முகப் பிரம்மன் நினைவுக்குக் கொண்டு வந்து படைத்து விடுகிறார். இந்தக் காரணத்தினாலேயே, வேத மத அறிவை, நாமும் ஓரளவேனும் புரிந்து கொண்டால், நாம் உட்கார்ந்த இடத்திலிருந்தே, ஆரம்பம் முதல் முடிவு வரை சொல்லிவிட முடியும்.

மற்றொரு விஷயம், எவ்வளவு காலம் இந்தப் பிரபஞ்சம் ஓடிக் கொண்டிருக்க முடியும் என்பது. பிரபஞ்சங்கள் எண்ணிலடங்காதவை. ஆனால் ஒவ்வொரு பிரபஞ்சமும், நான்முகப் பிரம்மனின் ஆயுள் வரைதான் 'தோன்றும்' (manifest) பிரபஞ்சமாக இருக்க முடியும். நான்முகப் பிரம்மனின் ஆயுள் முடியும்போது, அவர் படைத்து வரும் பிரபஞ்சத்தின் ஆயுளும் முடிந்து விடும். நான்முகப் பிரம்மனின் ஆயுள் முதலிலேயே முடிவாகி விடுகிறது. அது நூறு வருடம்.

**ஆயுள் காலம் நூறு**

தோற்றத்தின் போதே பிரம்மனின் ஆயுள் முடிவாகி விடுகிறது என்பதால் இந்தப் பிரபஞ்சம் தோன்றும்பொழுதே எப்பொழுது முடிந்துவிடும் என்பதும் முடிவு செய்யப்பட்டு விடுகிறது என்று புலனாகிறது. இதெல்லாம் அறிவுக்கு உகந்ததல்ல என்று தள்ளி விடுவதற்கு முன்னால், இன்றைய விஞ்ஞானம் இதுவே மனிதனுக்கும் பொருந்தும் என்ற சாத்தியகூறைக் காட்டும் மரபணுவை அறிந்துள்ளது என்பதைத் தெரிந்து கொள்வோம்.

சாலமன் மீன்களும், தேனீக்களும் தங்களது அடுத்த தலைமுறையை உருவாக்கியவுடன் இறந்து விடுகின்றன. இதற்குக் காரணம் ஒரு மரபணு. எப்பொழுது இறப்பு நேரிடும் என்ற செய்தி இந்த மரபணுவில் உள்ளது. இந்த

மரபணு வேலை ஆரம்பித்தால், இறக்கும் நேரம் வந்து விட்டது என்று பொருள். இப்படி ஒரு செய்தியைத் தாங்கியுள்ள மரபணு ஒன்று நம் உடலிலும் இருக்கிறது என்று கண்டுபிடித்துள்ளனர்.

குறிப்பிட்ட கால அளவே வாழவேண்டும் என்னும் Apoptosis அல்லது Programmed cell death என்ற ஒரு விஷயம் செல்களுக்கு உண்டு. அதன் விவரம் நம் உடலில் மரபணுவுக்குள் ஒளிந்துள்ளது. கருவில் இருக்கும்போதும், வெளியில் நடமாடும்போதும், அவ்வப்பொழுது இதற்கு வேலை உண்டு. இந்த மரபணுவுக்கு மனிதனின் இறப்பை நிர்ணயிப்பதிலும் வேலை இருக்கிறதா என்ற ஆய்வு நடந்து கொண்டிருக்கின்றது. கருவிலேயே மரபணுவில் ஆயுள் நிர்ணயம் செய்யப்படுவது சாத்தியமானதுதான் என்றும் சொல்லப்படுகிறது. இந்த மரபணு கொண்டுள்ள செய்தியை நம்மால் மாற்ற முடிந்தால் இறப்பை வெல்ல முடியும் என்றும் விஞ்ஞானிகள் கருதுகின்றார்கள்.

இமயமலைக் குகைகளில் இன்றும் கூட சிலர் முன்னூறு, நானூறு வருடங்கள் வாழ்ந்து கொண்டிருகிறார்கள் என்று சொல்கிறார்கள். சித்தர்கள் பலரும் பல நூறு, ஆயிரம் வருடங்கள் வாழ்ந்தவர்கள் என்றும் சொல்லப்படுகிறது. சித்தர்கள் என்றாலே சித்தி அடைந்தவர்கள்; அதாவது நினைத்தது கைகூடப் பட்டவர்கள் என்று பொருள். அவர்கள் பெற்ற சித்தி வல்லமையால் பௌதிகமான மரபணுவை மாற்ற முடிந்திருக்கிறது.

பல நூற்றாண்டுகள் அவர்கள் உடலுடன் வாழ்ந்திருந்தாலும், பிரம்மனின் ஆயுளைத் தாண்டி யாரும் வாழ முடியாது. ஆயுள் முடிந்தவுடன், 'ஆட்டம் க்ளோஸ்' என்று அவரும் புறப்பட்டு விடுவார். முக்தியும் சித்தியும் அடைந்தவர்களும் அவருடன் இந்தச் சக்கரத்தை விட்டே நீங்கி விடுவார்கள். அதற்கப்புறம், பரம்பொருளுடன் ஐக்கிய நிலைதான்.

நான்முகப் பிரம்மன் ஆயுள் நூறு என்பதால், நூறு என்னும் ஆயுள் கணக்கு மனிதனுக்கும் விசேஷமாகிறது. பிரம்மனின் நூறு வயதை ஒட்டியே, வேத நூல் பிராயம் நூறு என்கிறார்கள். இதை ஒட்டியே நூறு ஆண்டுகள் வாழ்க என்று பெரியோர் வாழ்த்துகின்றனர். நூறு வருடங்கள் ஜீவிக்க வேண்டும், நூறு வருடங்கள் சூரியனைப் பார்க்க வேண்டும், நூறு வருடங்கள் புகழும், மகிழ்ச்சியும் பொங்க வாழ வேண்டும் என்று மந்திரங்கள் உள்ளன. ராம தூதனாக வந்த அனுமனைப் பார்த்ததும் சீதைஇவ்வாறு கூறுகிறாள் - "ஒருவன் பிழைத்து மாத்திரம் இருந்தால், நூறு வருடங்களுக்குப் பிறகாவது சந்தோஷத்தை அனுபவிக்காமல் இருக்கமாட்டான் என்னும் உலக வழக்கு என் விஷயத்தில் உண்மை ஆயிற்று," என்று நூறு வருஷம் பிழைத்திருப்பது பற்றிக் கூறுகிறாள். (வால்மீகி ராமாயணம்- 5-34-6)

இங்கு ஒரு கேள்வி வருகிறது. ராமர் 11,000 வருடங்கள் வாழ்ந்ததாக வால்மீகி கூறுகிறார். தசரதன் போன்றோரும் பதினாயிரம் ஆண்டுகள், அறுபதனாயிரம் ஆண்டுகள் என்று ஆயிரக்கணக்கான வருடங்கள் வாழ்ந்தனர்

என்று சொல்லியிருக்கிறார்களே. இவையெல்லாம் எப்படிச் சாத்தியமாகும்? ஆகாது. எனவே இவை கட்டுக்கதைகள் என்று எண்ணத் தோன்றும்.

ஆனால் சீதை கூறியிருப்பதைப் பாருங்கள். மனிதனின் உடல் தாக்குப் பிடிக்கும்படியான நூறு வயது வாழ்க்கைதான் உலக வழக்கில் அன்றும் இருந்திருக்கின்றது என்பது அவள் கூறுவதிலிருந்து தெரிகிறது. அப்படியிருக்க ஆயிரக்கணக்கான வருடங்கள் என்று கூறியது கற்பனையா?

இல்லை. அற்புதமான இந்த வேத மதத்தில், பல ட்ரில்லியன் வருஷங்கள் ஓடும் 'தோன்றும்' பிரபஞ்சத்தில், பலவிதக் கணக்கு வழக்குகள் இருக்கின்றன. அதில் ஒன்று ராம ராஜ்ஜியம் சொல்லப்பட்ட வருடக் கணக்காகும். இந்தக் கணக்கின் அடிப்படையில் நூறு வருட மனித ஆயுளில், ஆயிரக்கணக்கான வருடங்கள் எப்படி சொல்லப்படுகிறது என்று விளக்கலாம். அதைப் பிறகு பார்ப்போம். வேறு சில அடிப்படைகளைத் தெரிந்து கொண்டால் அதை விளக்குவது சுலபம். அதனால் அடிப்படைகளிலிருந்து ஆரம்பிப்போம்.

**அடிப்படைப் பரிமாணக் கூறுகள்**

நாராயணனின் கொப்பூழில் தோன்றிய பிரம்மன் படைப்பை ஆரம்பிக்கிறார். வேத அறிவின்படி, தன் தியானத்தில் உற்பத்தி செய்த படைப்பு, எல்லாத் திசைகளிலும் சரியானபடி சென்று கொண்டிருக்கிறதா என்று சரிபார்க்க நான்கு திசைகளிலும் பார்க்கிறார். இதைக் காட்டவே அவருக்கு நான்கு பக்கங்களிலும் முகங்கள் உள்ளனவாக சித்தரிக்கப்படுகிறது. எல்லாம் திருப்தியாகச் சென்று கொண்டிருக்கிறது என்று மீண்டும் தியானத்தில் ஆழ்ந்து விடுகிறார்.



இங்கே கவனிக்க வேண்டிய விஷயம், திசைகள். விண்வெளியில் திசைகள் எப்படி இருக்கும்? சூரியனை முன்னிட்டு, பூமியில் திசைகள்

நிர்ணயிக்கப்படுகின்றன. ஆகாயத்தில் போனால் திசை ஏது என்ற கேள்வி வருகிறது.

ஆகாயத்திலும் திசை இருக்கிறது. எப்படி என்று பார்ப்போம்.

**கால, தேச** (**இட**), **பரிமாணம்** என்பதை மட்டுமே இன்றைய விஞ்ஞானம் அறிந்துள்ளது. வேத மதப் பிரபஞ்சவியலில் இது முக்கூட்டுப் பரிமாணமாக உள்ளது. அது திக்கு, தேச, காலம், பரிமாணம் எனப்படும். இதை 'த்ரிப்ரச்னாதிகாரம்' என்பர். திக்கு இல்லாமல் தேசம் அதாவது இடம் கிடையாது. இடம் என்றால் அதற்கு ஒரு திக்கு இருக்கும். இடம் என்றால் கூடவே காலப் பரிமாணமும் வந்து விடும். இவை மூன்றும் ஒன்றுக்கொன்று இயைந்தவை.

திக்கு என்றால் நாம் திசை என்று பொருள் கொண்டு விடுகிறோம். திக்கு என்பது அதற்கும் அப்பாற்பட்டது. ஒருவன் வழி தெரியாமல் தவித்தால், எப்படி, எங்கு போவது என்று தெரியாமல் விழித்தால் அவனை 'திக்கற்றவன்' என்கிறோம்; 'திக்கற்று நிற்கிறான்' என்கிறோம். ஆகவே திக்கு என்பது வழி அல்லது செல்ல வேண்டிய பாதை என்பதாகும். பாதை வகுக்காமல் பயணத்தை எப்படி பிரம்மன் தொடங்க முடியும்?

இந்தத் திக்கை இன்றைய அறிவியலார் யோசிக்கவில்லை. ஒளிக்கீற்று தேச-காலப் பரிமாணத்தில் வளைந்து செல்கிறது. அந்த வளைவு அதன் பாதை- அதன் Direction- அதை திக்கு எனலாம். ஈர்ப்பு விசை உள்ள ஓர் இடத்தை நெருங்கும் ஒளிக்கீற்று பாதையை மாற்றிக்கொள்கிறது. திக்கு, தேச, காலம் இவை ஈர்ப்பு விசையால் மாறுபாடு அடையக்கூடியவை என்னும் அடிப்படை விதியில் வேதம் கூறும் பிரபஞ்சவியல் அமைந்துள்ளது.

இதை ஒட்டியது பிரபஞ்சங்களின் அமைப்பும் சுழற்சியும். பல பிரபஞ்சங்கள் (Multiverses) இருப்பதை இன்றைய அறிவியலார் ஒத்துக்கொண்டுள்ளனர். ஆனால் அவை எப்படிப் பயணிக்கின்றன என்பதைக் கற்பனையாகத் தான் சொல்லியுள்ளனர். ஒவ்வொரு பிரபஞ்சமும் ஒரு குமிழியாக உப்பிக்கொண்டே போகின்றன என்பது அவர்களது சமீபத்தியக் கருத்து. குமிழியாக ஆக்கும் மூல காரணம் எப்படியிருக்கும்? தெரியாது. குமிழி எத்தனை காலம் உப்பிக் கொண்டே போகும்? ஒரு நாள் வெடித்துவிடும் அல்லவா? அப்பொழுது என்ன ஆகும்? அவர்களிடம் விடை கிடையாது. அந்தக் குமிழிகள் போகும் வழிப்பாதை என்ன? விடை இல்லை.

வேதம் கூறும் பிரபஞ்சவியலில் விடை இருக்கிறது. மேல்சொன்ன இரண்டு விஷயங்களையும் (திக், தேச, காலம், மைய ஈர்ப்பு விசை + பிரபஞ்சங்கள்) ஒன்றே இணைக்கிறது இந்தப் பிரபஞ்சவியல்.

சக்கரத்தில் பயணிக்கும் பிரபஞ்சத்தில் திக்கு இருக்கிறது.

முன்பு நடராஜர் ரூபத்தில் காட்டிய சக்கரத்தில் எண்ணிலடங்கா பிரபஞ்சங்கள் சுழலுகின்றன என்று பார்த்தோம். இந்த அமைப்பை குயவனின் பானை வனையும் சக்கரத்திற்கு ஒப்பிடலாம்.

அந்தச் சக்கரத்தின் நடுவில் ஓர் அச்சு உண்டு. அதை ஆதாரமாகக் கொண்டு சக்கரம் சுழலும். குயவனின் சக்கரத்தில் எண்ணிலடங்கா வட்டங்களை இணைத்துக் கொள்ளுங்கள். சக்கரத்தின் ஒவ்வொரு வட்டமும் ஒவ்வொரு பிரபஞ்சம் செல்லும் பாதை. அதில் ஒரு வட்டத்தில் நம் பிரபஞ்சம் இருக்கிறது என்று கொள்வோம். இந்தச் சக்கரத்தில் பல வட்டங்கள், முன்னும் பின்னும், மேலும் கீழும் என்று கணக்கில் அடங்காமல் இருக்கும் அமைப்பே பல பிரபஞ்சங்களின் அமைப்பாகும்.



குயவன் சுழற்றி விடுவது போல, இந்தச் சக்கரம் அச்சான இறைவனால் எந்நேரமும் சுழற்றப்பட்டுக்கொண்டே இருக்கிறது. இதைத்தான் அவன் எந்நேரமும் கர்மம் செய்து கொண்டே இருக்கிறேன் என்று கீதையில் கூறுகிறான். இந்த அச்சான ஆதாரம்தான் ஈர்ப்பு மையம். சுழலும் வட்டங்களில் நாமிருக்கும் பிரபஞ்சங்களும் பயணிக்கின்றன.

இங்கே ஒரு செய்தி மறைந்திருக்கின்றது. பிரபஞ்சங்கள் பயணிப்பது வட்டத்தில். அப்படியென்றால், பிரபஞ்சங்கள் அந்தரத்தில் பயணிக்கவில்லை. ஓர் ஆதாரத்தில், அதாவது base ஒன்றில் பயணிக்கின்றன என்றாகிறது. வட்டம் சுழல, அதன் மீது பிரபஞ்சமும் ஓடுகிறது. இந்தக் கருத்தில், இன்றைய அறிவியலாரின் குழப்பம் ஒன்று தீர்கிறது.

Big Bang என்று வெடித்துச் சிதறலினால் அண்டங்கள் உருவாகி சென்று கொண்டேயிருக்கின்றன என்பது பிரசித்தமான கருத்து. வெடிப்பினது வலிமையைப் பொருத்துதான் சிதறலின் ஓட்டமும் இருக்கும். அதன்படி, போகப்போக அண்டங்களின் ஓட்டம் குறைய வேண்டும். அப்படிக் குறையக் காணோம், குறையும் என்ற சாத்தியமும் இருக்கக்காணோம். இதுவே அந்தக் குழப்பம்.

நாம் எடுத்துக்கொண்ட குயவன் சக்கரத்தைப் பார்ப்போம். குயவன் சக்கரச் சுழற்சியில், வட்டம் இடை விடாமல் சுழன்று கொண்டிருக்கிறது. வட்டங்களைச் சுழலச் செய்வது அச்சு. அந்த அச்சு போல் ஆதாரமாக இருக்கும் சக்தியை இறைவன் என்கிறோம். சக்கரத்தின் வேகத்தை நிர்ணயம் செய்வது இறைவன் என்னும் அச்சு. ஆதாரமான அச்சின் (இறைவனின்) இயக்கத்தால் எழும் வேகம், வட்டங்களையும் (base) அவற்றில் பயணிக்கும் அண்டங்களையும் சேர்த்து இழுத்துக் கொண்டு போகிறது. சுழலும் அண்டங்களுக்கும் உள்ளிடை சக்தி (charge) இருந்தால், அந்த சக்தியுடன், base- ஆக அமைந்த வட்டத்தின் சுழலும் வேகமும் சேர்த்து, இப்பொழுது இருப்பது போல் எப்பொழுதும் ஓடிகொண்டே இருக்கும்.

இதில் தெரியும் இன்னொரு சமாசாரம், வட்டங்கள் திரவத் தன்மை (fluidity) கொண்டதாக இருக்க வேண்டும் என்பது. அதில்தான் இந்த அண்டங்கள் அடித்துச் செல்லப்படுவதைப் போல் அமைய முடியும். இந்த ஆதாரத் திரவத் தன்மை வாயு ரூபத்தில் இருப்பதாக பிரபஞ்சவியல் கூறுகிறது. இந்த வாயு, ஸப்த வாயு என்று ஏழு வாயுக்களாக உள்ளன. அவற்றில் ஐந்து பூமியில் உள்ளன. மீதி இரண்டும் பிரபஞ்சச் சுழற்சியில் உதவுகின்றன.

அவை:

(1) **ஆவஹன்** :- மேகங்கள் மிதக்க ஆதாரமாக இருப்பது.

(2) **ப்ரவஹன்** :- உயிர் தரும் பிராணனாக இருப்பது.

(3) **உத்வஹன்** :- கடல் நீரை ஆவியாக்கி மேகமாக்குவது.

(4) **சம்வஹன்** :- மேகங்களுக்கு இடையே இருந்து மழை பொழிய ஏதுவாவது

(5) **விவஹன்** :- சூறாவளி போன்ற வேகக் காற்றில் நிலை பெற்றிருப்பது.

இனி வருபவை உலகிற்கு வெளியே இருப்பவை.

(6) **பரிவஹன்** :- பால் வெளி என்னும் நாம் இருக்கும் கலக்சிகள் போன்றவை செல்ல ஆதாரமாக இருப்பது.

(7) **பராவஹன்** :- பிரபஞ்சம் முழுவதையுமே தாங்கிக் கொண்டு செல்லும் ஆதார வாயு இது. உடுக்கையில் ஆரம்பித்த பிரபஞ்சத்தை அக்னி வரை இழுத்துக் கொண்டு செல்கிறது இந்த வாயு. இதில்தான் மொத்தப் பிரபஞ்சமும், அதன் இயக்கமும் நடைபெறுகின்றன.

பராவஹன் சென்று கொண்டிருப்பதால் அதில் பயணிக்கும் பிரபஞ்சங்களும் அது செல்லும் திக்கிலே செல்கின்றன! இது சுழல் பாதை என்று பிரபஞ்சவியல் கூறுகிறது.

எப்படி இது சுழல் பாதை என்பதை இன்றைய அறிவியல் மூலமாகவும் சொல்லலாம். இங்கே வேலை செய்வது Centripetal force போன்ற சக்தி.

இந்தப் படத்தில் உள்ள நபர் போல் இறைவனை அச்சாக உருவகிக்கலாம். நடுவில் நிற்கும் நபர் ஆதாரமான அச்சு போன்றவர். அவரது கையில் தான் சுழற்றுகின்ற வலிமையையும் ஆதாரமும் இருக்கிறது. அவர் கயிற்றைச் சுழற்றும்

போது அது வட்டப் பாதையில் சுழல்கிறது. சுழற்றும் கயிற்றின் நுனியில் இருப்பது அண்டங்கள். இந்த அமைப்பை பிரம்மச் சக்கரம் என்றும் அதில் உள்ள ஆரங்கள் (spokes) என்று பலவற்றையும் உபநிடதங்கள் விவரிக்கின்றன.



நடுவில் உள்ள மைய சக்திக்கு செங்குத்தாக உள்ள ஆரங்களில் அண்டங்கள் என்னும் charged particleசெல்லும்போது, பாதை வட்ட வடிவில் அமைகிறது. எனவே இடைவிடாது சுழலும் பிரம்மச் சக்கரத்தில் அண்டங்கள் அந்தச் சுழல் பாதையில் தொடர்ந்து சென்றுகொண்டே இருக்கின்றன.

இங்கேயும் ஒரு கேள்வி வருகிறது. ஆதார அச்சு இறைவன் என்று சுழற்றும் அவன் சக்தியைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் சுழலும் அண்டத்திற்கும் ஓர் உள்ளிடை சக்தி இருக்க வேண்டும். அது எங்கிருந்து வருகிறது?

இதை விளக்க, குழந்தை பிறப்பில் நிகழ்வதை உதாரணமாகக் காட்டலாம்.

சிசேரியன் ஆபரேஷன் மூலமாகக் குழந்தை பிறக்கிறது என்று வைத்துக் கொள்வோம். வயிற்றைத் திறந்தாயிற்று. குழந்தை, கர்பப்பை நீரில் இன்னும் மூழ்கி இருக்கிறது. சில நேரங்களில், சிக்கலான பிரசவங்களில் பல நிமிடங்கள் திறக்கப்பட்ட வயிற்றில் குழந்தை இருக்கும். ஆனால் அக்குழந்தை பிறப்பது எப்போது என்று சொல்கிறோம்? சாதாரண பிரசவமானால் தலை தெரிவது, பூமியில் விழுவது, வெளிக் காற்று படுவது, அழுவது என்று பலரும் பல வித பதில்கள் வைத்திருப்பார். முடிவான பதில் என்ன என்று ஆராய்ந்தால், மூச்சு நிற்பது என்பது இறப்பு என்றால் மூச்சு ஆரம்பிப்பது பிறப்பு ஆகும். அந்தக் குழந்தையை வெளியே எடுத்து, அது அழ ஆரம்பித்தவுடன், காற்று நுரையீரலை அடைந்தவுடன் உயிர்க் கணக்கு ஆரம்பிக்கிறது.

இங்கே ஒன்றைப் பார்க்க வேண்டும். அக்குழந்தை வயிற்றைத் திறந்தும் பல நிமிடங்கள் இருந்ததே, அப்பொழுது உயிர் இல்லையா? அப்பொழுதும் அது

ஜீவிதத்தில்தானே இருந்தது? ஆம். அதுவரை ஜீவிதத்தைத் தந்தது கொப்பூழ்க் கொடி! படைப்பு ஆரம்பிக்கும் வரை இறைவனின் கொப்பூழில் காப்பாற்றப்பட்ட பிரபஞ்சம் போல், அந்தக் குழந்தையும் தாயின் கொப்பூழ்க் கொடியின் மூலம் ஜீவிதத்தில்தான் இருந்தது. கொப்பூழைவிட்டுப் பிரிந்தவுடன் தோன்றும் பிரபஞ்சம் போல் அதுவும் பிறக்கிறது. அங்கேயும் ஜீவிதத்தை அதுவாக உண்டாக்கிக் கொள்ளவில்லை. வெளியில் இருந்த காற்று (ப்ரவஹன்) கொப்பூழ் தந்த சத்துக்கு ஒரு substitute ஆக ஜீவிதத்தைத் தருகிறது.



பிரபஞ்சப் படைப்பில், கருவறையில் இருக்கும் வரை இறைவன். வெளியில் வந்தவுடன் வாயு தேவன்! இறைவனின் கொப்பூழ் தந்த ஜீவிதத்தைத் தருவதால், காற்றும் ப்ரத்யக்ஷ பிரம்மம் ஆகிறது. காற்றை கண்ணுக்குத் தெரிந்த கடவுள் அல்லது பிரம்மம் என்கிறோம். இதை எளிதாகப் புரிந்து கொள்ளும் வண்ணம், பரம்பொருள் திருமாலாகப் பாம்பணையில் படுத்துக்கொண்டு, கொப்பூழ் கொடி வெளிப்பட, அதில் முதல் பிறப்பாக நான்முகப் பிரம்மனைக் காட்டுகிறார். அந்த பிரம்மன் தோன்றும் பிரபஞ்சத்தின் சுவாசம் போன்றவன். தோன்றும் பிரபஞ்சம் அவர் கட்டுப்பாட்டில் வந்து விடுகிறது- மூச்சுக் காற்று நம் ஜீவிதத்தை நடத்துவது போல.

குழந்தையைப் போல, தோன்றும் பிரபஞ்சத்தின் அத்தனை படைப்புகளுமே இப்படி இறைவன் கருவிலும், கருவை விட்டு வெளியே இருக்கும் போது (தோன்றும் பிரபஞ்சத்தில்) அவனது மற்றொரு பிம்பமான பராவஹன் என்னும் வாயுவாலோ, அல்லது நாம் அறியாத ஏதோ ஒரு வஸ்துவினாலோ charged- ஆகப் போய்க் கொண்டிருக்கிறது.

இதிலிருந்து என்ன தெரிகிறது?

நாம், நமக்கு என்று எதுவும் இல்லை. இருப்பவை எல்லாம் அவன் உண்டாக்கி (கருவில் இருப்பதுபோல), அவன் உமிழ்ந்து (தோன்றும் பிரபஞ்சத்தில் பிறப்பித்து), அவன் நடத்திச் சென்று, அவனே அதை உள்வாங்கி என்றென்றும்

பிரம்மச் சக்கரத்தில்- அந்தப் பிரம்மச் சக்கரம் அமைந்த தன் கர்ப்பத்தில் வைத்திருக்கிறான்.

**இதிலிருந்து தெரியும் மற்ற வேத மதக் கருத்துகள்:-**

- அவனன்றி ஓரணுவும் அசையாது. அவன்தான் ஒவ்வொரு அசைவையும் செய்பவன். அவன்தான் பிரபஞ்சச் சக்கரத்தைச் சுழலச் செய்பவன். அதில் அண்டங்களைச் செலுத்துகிறவன. அங்கே நம்மையும் பிறப்பித்து, நம் ஜீவிதத்தையும் நடத்துபவன்.

- பிறக்கும் முன் அவனில் நாம் நிலை பெற்றிருக்கிறோம். பிறந்த பின்னும், அவன் நம்முள் நிலை பெற்றும் (சுவாசக் காற்றாக), நம்மைச் செலுத்தியும், நமக்கு ஆதாரமான அடித் தளமாகவும் இருக்கிறான். நம்மை அவன் விடுவதில்லை - ஒழிக்க ஒழியாத உறவாக நமக்கும் அவனுக்கும் இருக்கிறது.

- இந்த உறவை நாம் மறந்து விடலாம். அவன் மறப்பதில்லை. மறப்பது அவன் மரபணுவில் இல்லை எனலாம், அவனுக்கு மரபணு என்பவை இருந்தால்!!

- நம்மை விடாமல் பிடித்துகொண்டிருப்பது அவன். அதனால நம்மைச் செம்மைப் படுத்தி எப்படியேனும் தன்னிடம் சேர்த்துக் கொண்டு விடுவான்.

மேல்சொன்ன உதாரண விளக்கத்தின் மூலம் தெரியும் மற்றொரு முக்கிய விஷயம் பித்ரு காரியம் ஏன் செய்ய வேண்டும் என்பது. 'பெற்றோர் இறந்தவுடன் அவர்களுக்கு பித்ரு காரியம் செய்கிறேன் என்றால் அவர்களுக்குத் தெரியவா போகிறது? அது அவர்களை அடையப் போகிறதா என்ன? அதற்குப் பதிலாக அவர்கள் உயிருடன் இருக்கும் போதே அவர்களை நன்றாகக் கவனித்துக் கொண்டால் போதும். இறந்த பிறகு ஸ்ராத்தம் என்று சடங்குகள் செய்யத் தேவையில்லை. அப்படிச் செய்யவில்லை என்றால் அதனால் நம் பிள்ளைகளையும், பேரன்களையும் பாதிக்கும் என்பதெல்லாம் சும்மா புருடா.'- இதுவே இன்றைக்குப் பரவலான கருத்து.

பெற்றவர்கள் உயிருடன் இருக்கும் வரை அவர்களை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். இதில் மாற்றுக் கருத்தே இல்லை. இங்கே கொடுக்கல்-வாங்கல் (give and take) என்னும் இயற்கையின் நியதி வருகிறது. அக்னி ஹோத்திரம் ஹோமத்திலும் இந்தக் கொடுக்கல்-வாங்கல் இருப்பதைக் காணலாம். நல்ல காற்றை நாம் எடுத்துக் கொள்கிறோம். அதற்குப் பதிலாக அசுத்தக் காற்றைத் திருப்பித் தருகிறோம். இங்கே இயற்கையின் சமன்பாடு (equilibrium) பாதிப்படைகிறது. திருப்பிக் கொடுத்த காற்றை சுத்தப்படுத்தவில்லை என்றால், நமக்கு மட்டுமல்ல நம்மைச் சுற்றி இருப்பவர்களுக்கும் கிடைப்பது அசுத்தக் காற்றுதான். அதைத் தவிர்க்க அக்னி ஹோத்திரம் செய்யப்படுகிறது.

அதைப் போல பெற்றோர் நமக்குச் செய்வதால் நாம் பட்ட கடனை, நாம் திருப்பிக் கொடுக்க வேண்டும். பெற்றோர் மட்டுமல்ல, யாராக இருந்தாலும் அவரிடமிருந்து ஒன்றைப் பெற்றால் அதைத் திருப்பித் தர வேண்டும். இல்லை என்றால் நாம் கடன் பட்டவர்களாகி விடுவோம். கடன்பட்ட ஒருவனால், மற்றோருவனுக்குக் கடன் அளிக்க முடியாது. உயிருடன் உலவும் காலத்தில் யாரிடம் கடன் பட்டாலும், அந்தக் கடனைத் திருப்பித் தரவில்லை என்றால், வேறொரு பிறவியிலாவது அந்தக் கடனை அடைத்து விட முடியும்.

இவையெல்லாம் பிறந்தபிறகு - அதாவது வாழும் காலத்தில் நடப்பது.

ஆனால் பிறக்கும் முன் பட்ட கடனுக்கு நாம் எப்பொழுது, எப்படித் திருப்பி அடைக்கிறோம்?

தாய், தந்தையரது செல்களின் ஒடுக்கத்தில் நுழைந்து பத்து மாதம் கர்ப்பத்தில் வளர்கிறோமே, அப்பொழுது கடன் படவில்லையா? அவர்களது மரபணு மூலமாக, ஐம்பூதங்களிளிருந்தும், சத்தினை இழுத்து நம் உடலை வளர்க்கிறோமே, அந்த ஐம்பூதங்களுக்கும் கடன் படவில்லையா? இழுக்கும் மூச்சுக் காற்றுக்கே, திருப்பித் தந்தால்தான் நம் வாழ்கை நோயற்று இருக்கும். பலப் பலவிதமான உடல் பகுதிகளுக்காக ஐம்பூதங்களிலிருந்து ஓயாது பத்து மாதங்கள் தேவையானவற்றை தாயின் கொப்பூழ் கொடி மூலமாகப் பெற்றிருக்கிறோமே, அது கடன் இல்லையா? அதை எப்படி, எப்பொழுது திருப்பித் தருகிறோம்?

அங்குதான் வேத மதத்தின் மிக உயர்த்த இயற்கை சமன்பாடு சிந்தனை தெரிகிறது. பிண்டமாக, உதகத்தில் (நீரில்) நிலைபெற்று கர்ப்பத்தில் நாம் பெற்றதை, உதகத்தில் பிண்டத்தை இணைத்து, பிண்டோதகக் கிரியையாக, யார் மூலமாகப் பெற்றோமோ, அவர் மூலமாக, அவர் நாம் பிறக்கும் முன் இருந்த நிலையை ஒத்த நிலையை இறப்பில் அடைந்தவுடன், திருப்பித் தருகிறோம்.

இங்கே கடனைத் திருப்பிச் செலுத்த உதவும் Medium பெற்றோர். கடன் பட்டது இயற்கைக்கு.

உதகத்தில், பிண்டம் வளரக் கடன் வாங்கினோம். பிண்டத்தை உதகத்தில் கரைத்து அதைத் திருப்பிச் செலுத்துகிறோம்.



நம் பெற்றோர், பாட்டன்கள், அவர்தம் பெற்றோர் என்று குறைந்தது மூன்று தலைமுறை வரை மரபணுவை கருவில் கடன் வாங்குகிறோம். அதன் அடிப்படையில் இயற்கையிலிருந்து நமக்குத் தேவையானதை எடுத்துக்கொள்கிறோம். அதைத் திருப்பித் தரவில்லை என்றால், நம்மிடம் உள்ள இருப்பு குறைந்து விடும். குறைந்த இருப்பிலிருந்து நம் பிள்ளைகளும் அவர்கள் பிள்ளைகளும் எந்த அளவு எடுத்துக் கொள்ள முடியும்? சொத்து இருந்தால்தானே அடுத்த தலைமுறைக்குக் கொடுக்க முடியும்? கடன் வைத்திருந்தால் கடன் கொடுத்தவன் (இயற்கை) நம் பிள்ளைகளை விடுவானா? அல்லது அவர்கள் கடன் கேட்டால் கொடுப்பானா? இல்லையே! இயற்கை நமக்குத் தருவது நோயற்ற வாழ்வு. நாம் இயற்கைக்குக் கடன் பட்டால், நம் பிள்ளைகளுக்குக் தேவையான கடன் (நோயற்ற வாழ்வு) இயற்கையிலிருந்து கிடைக்காமல் போகும்.

மேலே கூறப்பட்ட சிசேரியன் குழந்தை உதாரணத்தைப் பாருங்கள். வயிற்றைத் திறந்தும், அது ஜீவிதத்தில் இருக்கிறது. அந்த ஜீவிதம் வளர இடம் தந்தது தாய் வயிறு. ஜீவிதம் பெற்றது அவள் கொப்பூழ் கொடி மூலமாக; அது அவள் இயற்கையிலிருந்து பெற்ற உணவு. இன்றைக்குப் பரிசோதனைக் குழாயில் கருவை உண்டாக்கினாலும், கரு வளர வேண்டியது தாயின் கர்ப்பத்தில். அதற்கு மாற்று என்றுமே வர இயலாது.

பெற்றோர் மூலமாக நாம் பஞ்ச பூதங்களுக்கும் பட்ட கடனை, தீவிர சிந்தனையுடன் (ஸ்ரத்தையுடன்) பிண்டம் வைத்து நீர் மூலமாகத் திருப்பித் தருகிறோம்.

பிரபஞ்சங்களை கர்ப்பத்தில் வைத்துள்ள இறைவனை இதே எண்ணத்தில் பாருங்கள். அவனுக்கும் நாம் கடன் படவில்லையா? நம்மை உருவாக்கி, பிறப்பித்து, கர்ம வினையை முடிக்க உதவி, இந்தக் கர்மச் சக்கரத்திலிருந்து விடுபட உதவுகிறானே, அவனுக்கு என்ன திருப்பிச் செய்கிறோம்?

அவன் எதிர்பார்க்க மாட்டான்; எதிர்பார்க்கக் கூடாது என்றெல்லாம் சொல்லலாம். பெற்ற தாயும் எதிர்பார்த்துச் செய்வதில்லை. எதிர்பார்ப்பதும் இல்லை. ஆனால் பிள்ளைகளான நமக்குக் கடமை உண்டல்லவா? அவளுக்கு ஏதேனும் செய்து அவளை மகிழ்ச்சியில் திக்குமுக்காடச் செய்ய வேண்டும்; நாம் செய்வதில் அவள் பெருமை அடைய வேண்டும் என்று நாம் நினைக்கிறோம் அல்லவா? அதைத்தான் கடவுளுக்கும் நாம் செய்ய வேண்டும். அவனை உயர்த்திப் பேசுவதில், புதிதாக அவனுக்குப் பெருமை வந்து விடுவதில்லை. அப்படிப் பேசுவது நமக்குத் தான் பெருமை- எப்படிப்பட்ட தாயை நான் அடைந்துள்ளேன் என்று பிள்ளைகள் பெருமிதத்துடன் சொல்வதைப் போல.....

# பூமி செல்லும் திசையும், வைகுண்ட ஏகாதசியும், மகா சிவராத்திரியும்

நான்முகப் பிரம்மன் நான்கு திசைகளிலும் பார்த்து படைப்பை ஆரம்பித்தார். இவற்றுள் இரண்டு திசைகள் நிச்சயமானவை. அவை வடக்கும், தெற்கும் ஆகும். பொதுவாகவே அண்ட வெளியில் நாம் இருக்கும் மண்டலத்துக்கு மேல் புறம் இருப்பது உத்தரம் என்னும் வடக்கு. அதற்கு நேர் எதிரே இருப்பது, அதாவது நாம் இருக்கும் மண்டலத்துக்குக் கீழே இருப்பது தக்ஷிணம் என்னும் தெற்கு. நான்முகப் பிரமன் தனக்கு மேலும், கீழும் பார்த்த திசைகள் வடக்கு, தெற்கு என்று ஆயின.

பிரம்மம் என்ற சொல்லுக்கு பெரிதானது, வளர்ந்து கொண்டே போவது என்ற இரண்டு அர்த்தங்கள் உள்ளன. தோன்றும் பிரபஞ்சத்தில் நுழைந்தவுடன், உப்பிக் கொண்டே போவதுபோல் படைப்பு வளரலாயிற்று. நான்முகப் பிரம்மனும் தானும் அப்படியே பயணிக்கிறார். மேல் எழும்ப எழும்ப அந்தத் திசை வடக்காயிற்று. அவர் கீழே விட்டுச் சென்ற பகுதி தெற்கு ஆயிற்று. இதையே வேறு விதமாகச் சொல்வதென்றால், முதலில் தெற்கில் அண்டங்கள் தோன்றி, அழிந்து, மீண்டும் சிதறலிருந்து உருவாகிக் கொண்டிருக்கின்றன. வடக்கு நோக்கிப் போகப் போக புதிதாகப் படைப்பு எழுந்து கொண்டே இருக்கின்றது.

ஆனால் ஒரேயடியாக வடக்கு முகமாகவே செல்ல முடியாது. குயவனின் சக்கரத்தைப் போன்ற ஆதார சக்தியின் இழுப்பினால், எப்பொழுதுமே கிழக்கு அல்லது வலப் புறம் நோக்கியே திரும்பி சென்று கொண்டிருக்க வேண்டும். கிழக்கு என்பது அவரும், அவரது படைத்தலும் பயணிக்க வேண்டிய திசை. நடராஜரது உருவத்தில் அந்த திசை உடுக்கையில் கிளம்பி, அக்னியை நோக்கிச் செல்வது. இது நேர்ச் சுற்று அல்லது வலச் சுழி, அதாவது clockwise direction ஆகும். நான்முகப் பிரம்மன் முதலில் மேல் முகமாகப் பார்த்து, பின் தான் பயணிக்க வேண்டிய திக்கை நோக்கி, அதற்குப் பின் கீழ் முகமாக நோக்கும் போதும் வலச் சுற்று வருகிறது. இப்படி இந்த சுற்று வடக்கிலிருந்து தெற்கை நோக்கிச் செல்வதால் இதைப் பிரதட்சிணம் என்கிறோம்.

இந்தப் பிரபஞ்சமும், நடுவில் ஆதார அச்சாக இருக்கும் பரம் பொருளான இறைவனைப் பிரதட்சிணம் செய்து வருகிறது. விநாயகப் பெருமான் தன் தாய் தந்தையைச் சுற்றி வந்ததாலேயே உலகைச் சுற்றி வந்ததாக அறிவுறித்தியது, அந்தப் பரம்பொருளான இறைவனை ஆதாரமாக வைத்து உலகங்கள் அனைத்தும் சுற்றி வருகின்றன என்பதைக் காட்டவும், அது மட்டுமல்லாமல் அவரைச் சுற்றுவதால் அனைத்து உலகங்களும், அனைத்து பிரபஞ்சங்களும் செல்லும் மாபெரும் முழுச் சுற்றினையுமே செய்வதற்கு ஒப்பாகும் என்பதை உள் பொருளாக உணர்த்தவும் எழுந்தது என்றும் சொல்லலாம்.அண்ட சராசரங்களும் அவனைச் சுற்றுவது போல, அண்ட சராசங்களுக்கும் அதிபதியான பரம்பொருளை நாமும் கோயிலில் பிரதட்சிணம் செய்கிறோம்.

பிரபஞ்சம் செல்லும் பாதையே பிரதட்சிணமானது என்று நாம் சொல்வதை, நாம் கண்கூடாகப் பார்க்கும் வான்வெளி அண்டங்கள் மெய்ப்பிக்கின்றதா? வானில் காணும் நட்சத்திரங்களும், அவற்றின் கூட்டங்களும் வேறு வேறு திசையில் சென்று கொண்டிருக்கின்றன அல்லவா என்ற கேள்வி எழுகிறது. தோன்றிப் பல காலம் ஆகவே (10 to the power of 17 வருடங்கள் ஆகிவிட்டன; இன்னமும் அவ்வளவு வருடங்கள் செல்ல வேண்டும் என்பது பண்டைய ஜோதிட- வான இயல் நிபுணரான பாஸ்கராச்சரியார் கணிப்பு.) அண்டங்கள் மோதி, உருண்டு, பிறழ்ந்து தற்சமயம் வேறு வேறு திக்கில் போவது போல் தோற்றம் அளிக்கிறது. மேலும் ஒவ்வொரு கலக்சி கூட்டமும் இன்னொரு கலக்சி கூட்டத்தைச் சுற்றுகிறது. ஆகையால் அப்படி உருமாறி வந்துள்ள மூன்றாம் தலைமுறை நட்சத்திரமான நமது சூரியக் குடும்பத்தில் உள்ள நம் பூமி இப்பொழுது உள்ள நிலையில் எது வடக்கு, எது கிழக்கு என்று எப்படிச் சொல்ல முடியும் என்ற கேள்வி வருகிறது. மனித சமுதாயத்தின் நன்மை ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட ரிஷிகள் வேத விஞானத்திலிருந்து நமக்கு இந்த விவரங்களை எடுத்துக் கொடுத்துள்ளனர்.

அவர்கள் வாயிலாக நமக்குக் கிடைத்துள்ள விவரம், நம் பூமி தன் சுழற்சிக்கு ஆதாரமாகக் கொண்டுள்ள வட துருவப் பகுதியே பிரம்மன் பயணிக்கும் வடதிசை என்பதாகும். நம் சூரிய மண்டலத்திலேயே மற்ற கிரகங்கள் சுழலும் அச்சு வேறு வேறு திசையில் உள்ளன. ஆனால் பூமி சுழலும் அச்சு வடதிசையில் உள்ள பிரம்ம லோகத்தை மட்டுமே ஆதாரமாகக் கொண்டது. நான்முகப் பிரம்மன் நம்மை விடாமல் பற்றிக் கொண்டு, பிடித்து இழுத்துச் செல்வது போல் நாம் இந்தப் பிரபஞ்சத்தில் பயணிக்கிறோம்.




தென் திசை என்பது முடிந்து போன விஷயங்கள் கொண்டவை. Re-cycling ஆகிக் கொண்டிருக்கும் இடம். தெற்கிலிருந்து உயர வேண்டும் என்றால் நாம் இருக்கும் பூ மண்டலத்துக்கு வர வேண்டும். இங்கிருந்து உயர வேண்டும் என்றால் பிரம்மனை நோக்கிய பயணம்தான்.

அதனால் மறு பிறவிக்குக் காத்திருக்கும் இறந்தோர் செல்லும் இடம் தென் புலம் என்றாயிற்று. அது செல்லும் மார்க்கம் பித்ருயானம் எனப்பட்டது. மீண்டும்

பிறப்பெடுக்க வேண்டாத நிலையில் தெய்வீக நிலையை அடைவோரும், முக்தர்களும் செல்லும் திசை வட திசை ஆனது. அது செல்லும் மார்க்கம் தேவயானம் எனப்பட்டது.

முற்காலத்தில் வடக்கிருத்தல் என்று வட திசை நோக்கி த்யானத்தில் அமர்ந்து உயிரை விட்டதும், இந்த தேவயானத்தைப் பிடித்து பிரம்ம லோகத்தை அடைய வேண்டும் என்பதற்காகவே. பிதாமகர் பீஷ்மரும் அம்புப் படுக்கையில் படுத்து, சூரியனின் வடக்கு அயனத்திற்காகக் காத்திருந்தது இந்த தேவயான வழியைப் பிடிக்க வேண்டும் என்பதற்காகவே. குறிப்பாக அந்த வழி எது என்பதை இக்கட்டுரையில் காண்போம்.

நாம் இருக்கும் பகுதிக்கு வடக்கு முகமாக - அதாவது - துருவ நட்சத்திரப் பகுதியை நோக்கி, மேலாக ஏழு உலகங்கள் இருக்கின்றன. Realms of Existence என்று சொல்லலாம். நற் கர்மங்களைச் செய்தவர் அவரவர் நிலைக்கு ஏற்றவாறு இந்த பகுதிகளில் சஞ்சரிப்பர், இதில் முடிவான கடைசி நிலை பிரம்ம லோகம். நான்முகப் பிரம்மனும், பிரம்ம ஞானிகளும், முக்தர்களும் நிலை பெற்ற இடம்.

நாம் இருக்கும் பகுதிக்குத் தென் முகமாக ஏழு உலகங்கள் அல்லது நிலைகள் உள்ளன. மீண்டும் உலகில் பிறந்து உழல வேண்டிய நிலையில் இருப்பவர்கள் சஞ்சரிக்கும் இடங்கள் இவை.

இந்த அமைப்பை நோக்கினால் நாம் வாழும் பூமி பரிவாரங்களுடன் பயணம் செல்லும் ஒரு பயணியைப் போல உள்ளது. நமக்குக் கீழே (தென்புலம்) உள்ளவர்களுக்கு பூமியே கதி. அவர்கள் பூமியில் பிறந்து, உய்ந்து, மேல் முகப் பயணத்திற்கு மாற வேண்டும். மேல்முகப் பயணத்தில் இருப்பவர்கள் மேலும் மேலும் உயர்ந்து முடிவான பிரம்ம பதத்தை அடைய வேண்டும். இதில் நாம் வாழும் பூமி நடுவானது - விசேஷமானது. இதுதான் transit zone.

இங்கே ஒரு கேள்வி வரலாம்.

பூமியில் மட்டும்தான் உயிரினம் உள்ளதா? வேறு கிரகங்களில் இல்லையா?

வேத மதம் காட்டும் பிரபஞ்சவியலில், சரீரம் கொண்ட - அதாவது பௌதிகமான உருவில் உள்ள உயிரினம் என்பது எந்த ஒரு காலக் கட்டத்திலும், ஒரு இடத்தில் தான் இருக்க முடியும். நாம் இருக்கும் காலக் கட்டத்தில் நாம் இருக்கும் பூமியில் இப்பொழுது இருக்கவே, வேறு எங்கும் இருக்க முடியாது. விஞ்ஞானிகள் என்ன தேடினாலும் நம் அறிவுக்கு எட்டக்கூடிய உயிரினங்களை எங்கும் கண்டுபிடிக்க இயலாது.

ஆனால் நாம் இருக்கும் பூமியிலேயே, மேலும் கீழும் என்று ஏழும், ஏழுமான பதினான்கு உலகங்களைச் சொன்னோமே, அந்த உலக ஜீவர்கள் உலவலாம், அல்லது வந்து போகலாம். அவர்களும் நம்மைப் போன்ற ஜீவர்களே.

நாமும் நம் நிலையிலிருந்து உயர்ந்தால் மேலுலக ஜீவர்களைப் போல ஆவோம். அவர்களை ஊனக் கண்ணால் காண இயலாது. நமது பௌதிக விதிகளுக்கு வேறுபட்ட விதிகளுக்கு உட்பட்ட நிலையில் உள்ளவர்கள் அவர்கள். தெய்வமாக, தேவதையாக, நல்லோராக, வழிகாட்டியாக, பித்ருவாக அவர்கள் வந்து போவதை சிலரால், சில நேரங்களில் உணர முடியும்.

பிரபஞ்சத்தின் வடக்கு - தெற்கைப் பார்த்தோம். இனி பூமி செல்லும் பிரபஞ்சப் பயணத்தைப் பார்க்கலாம். அதற்கு முன் நம் பூமியின் திசைகள் எவை, அவற்றின் மூலம் பிரபஞ்சம் செல்லும் திசை எது என்று அறிய முடியுமா என்று பார்ப்போம்.

**பூமியின் திசைகள்**

பூமியின் அச்சு வட, தென் துருவங்களை இணைக்கிறது. இலங்கையும், உஜ்ஜயினி நகரும் இந்த அச்சுப்பாதையில் உள்ளன. வட துருவத்திற்கு நேர் தெற்கே இலங்கை இருக்கிறது. (விவரங்களை சூரிய சித்தாந்தம், சித்தாந்த சிரோமணி போன்ற நூல்களில் காணலாம்.) வட துருவப் பகுதியிலிருந்து வலச் சுற்றாகப் (clockwise) பார்க்கும் பொழுது இலங்கைக்கு 90 டிகிரி வலது புறம் கிழக்கு. 90 டிகிரி இடது புறம் மேற்கு. இந்த கல்பத்தின் முதல் நாள் சூரியன் மேஷ ராசி 0 டிகிரியில் இலங்கைக்கு 90 டிகிரி கிழக்கில் உதயமானது. உதயமான திசை பூமிக்குக் கிழக்கு என்றானது. அந்த திசை இன்று உலக வழக்கில் உள்ள கிழக்குத் திசையான ஜப்பான் உள்ள திசைதான். அங்கே யமகோடி என்னும் இடம் இருந்தது. தற்சமயம், இந்த இடம் பசிபிக் கடலுக்குள் உள்ளது.

இலங்கைக்கு இடது புறம் 90 டிகிரி தொலைவில் இருந்த இடம் மேற்கு திசையைக் காட்டுவது. இது ரோமக தேசம் எனப்பட்டது. (தற்போதுள்ள ரோம் அல்ல. 0 டிகிரி க்ரீன்விச்சுக்கு சிறிது மேற்கே அட்லாண்டிக் கடலில் இந்த இடம் இருக்கிறது.) இந்த ரோமக தேசத்தில் இருந்த மயன் என்னும் தானவன், சூரியனிடமிருந்து 'சூரிய சித்தாந்தம்' என்னும் வான இயல் சாஸ்திரத்தை உபதேசமாகப் பெற்றான்.

இலங்கைக்கு நேர் எதிர் புறம், 180 டிகிரி தொலைவில் இருந்த ஊர் 'சித்தபுரம்'

வட துருவம் காட்டும் திசை வடக்கு ஆகும். அதற்கு நேர் எதிரே தென் துருவம் காட்டுவது தென் திசை. இரு துருவங்களையும் இணைக்கும் அச்சு இலங்கை, உஜ்ஜயனி வழியாகச் செல்கிறது. இந்த அச்சு மேரு எனப்பபட்டது. மேருவின் உச்சி வட துருவம்.

இப்படி பூமிக்குச் சொல்லப்பட்ட திசைகள் இன்றும் உலகெங்கும் பயனில் இருக்கவே, வேத மத வழக்கமே இதற்கு ஆதாரமாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது.

**படைப்பு முன்னேறும் திசை**

இனி பூமி செல்லும் திசை, அதாவது இந்தப் படைப்பு நகரும் திசை எது என்று பார்ப்போம். நாம் இருக்கும் பால்வெளி காலக்ஸியின் நடுவில் இருப்பது மார்கழி மாதம் சூரியன் உதிக்கும் தனுர் ராசி. இதை மையமாக வைத்து பால்வெளியும் (நமது கலாக்சியும்) , நமது சூரிய மண்டலமும் சுற்றி வருகின்றன. இந்த மையத்தில் இருக்கும் நட்சத்திரங்கள் முதியவை என்றும், நமது கலக்சியின் ஓரப் பகுதிகளில் இருப்பவை இளையவை என்றும் சொல்லலாம். ஓரப்பகுதியில் இன்னும் புதிதாக நட்சத்திரங்கள் உருவாகிக் கொண்டிருக்கின்றன. மார்கழி மாத தனுர் ராசி (Sagittarius) மையம் என்றால், ஆனி மாத மிதுன ராசி (Gemini) ஓரம். இது நாம் இருக்கும் பால் வெளி கலக்சியின் ஒரு பக்கம். இந்தப் பக்கத்தில், இந்தப் பாதையில் நாம் இருக்கும் சூரிய மண்டலம், இதன் மையப் பகுதியிலிருந்து முக்கால் பங்கு (3/4) தொலைவில் இருக்கிறது.

ஜாதகக் கட்டம் என்று நாம் சொல்வது உண்மையில் விண்வெளியின் அமைப்பைக் காட்டும் வரை படம். கீழுள்ள படத்தில் விண்வெளியின் திசைகள் காட்டப்பட்டுள்ளன. நாமிருக்கும் கலக்சீயையும் காணலாம்.




Sagittarius எனப்படும் தனுர் ராசி, நம் பால் வெளி கலக்சியின் மையப் பகுதி. சூரியன் இந்த ராசியில் மார்கழி மாதம் சஞ்சரிக்கும். வெளி ஓரம் Gemini என்னும் மிதுனம்.

மிதுனத்தில் உள்ள மிருகசீர்ஷம் என்னும் நட்சத்திரம் இருக்கும் பகுதியை நோக்கி நாமும், நம் பிரபஞ்சமும் முன்னேறிச் செல்லும் பாதை செல்கிறது.

மார்கழி மாதத்தில் மிருக சீரிஷத்தில் பௌர்ணமி வரவே, அந்த மாதத்திற்கு மார்கழி என்னும் பெயரும், மார்கஷிர என்னும் பெயரும் வந்தது. பயணம் செல்லும் மார்க்கத்தைக் குறிப்பது என்பது இதன் பொருள்.

இந்தப் பயணம் செல்லும் திசை மார்கழி வடமேற்கு – ஆனி தென்கிழக்கு. அதாவது பிரபஞ்சப் பாதை வடமேற்கிலிருந்து தென் கிழக்கு நோக்கிச் செல்கிறது. அதர்வண வேதத்தின் உபவேதமான வாஸ்து சாஸ்திரத்தின்படி தென் கிழக்கு அக்னியையும், வட மேற்கு வாயுவையும் குறிப்பது. இதன் காரணம் பிரபஞ்சத்தின் பயணம் நடராஜர் கையிலிருக்கும் அக்னியை நோக்கிச் செல்கிறது. இந்தப் பயணம் ஆரம்பித்தது, வாயுவில் (பராவஹன்) தாங்கி, வாயுவால் செலுத்தப்பட்டு வந்து கொண்டிருக்கிறது.

இந்த அமைப்பில் வடகிழக்கு நோக்கி நமது துருவப் பகுதி அமைந்துள்ளது. அதாவது, பிரபஞ்சத்தின் வடக்கு திசையானது, பயணத்தில் திரும்பிச் செல்லும் போது வடகிழக்கைக் காட்டி அமைகிறது. இந்த விவரங்களைக் கொண்டு பிரபஞ்சத்தின் அடிப்படைகளையே கொடுத்துள்ளனர் நம் முன்னோர்.




இந்தப் படத்தில் வட மேற்கில் தனுர் ராசியில் சூரியன் வரும் போது மார்கழி மாதம்.

தென் கிழக்கில் மிதுன ராசியில் வரும் சூரியன் வரும்போது ஆனி மாதம்

இந்தப் பாதைக்குச் செங்குத்தான கோடு வட கிழக்கையும், தென் மேற்கையும் இணைக்கிறது. இதில் வட கிழக்கில் மீன ராசியில் சூரியன் வரும் போது பங்குனி மாதம். இந்தப் பாதையைத் தொடர்ந்து மேல் நோக்கிப் போவது தேவ யானம் என்னும் தெய்வ உலகுக்கான, பிரம்ம லோகத்துக்கான திசை.

இதன் எதிர் புறம் வரும் தென் மேற்கில் கன்னி ராசி உள்ளது. புரட்டாசி மாதம் சூரியன் இந்த திசையில் சஞ்சரிக்கும். இந்த வழி பித்ரு யானம் எனப்படும். இன்று வரையில் அறிவியல் தெரிந்துகொண்டுள்ள விவரம், நாம் இருக்கும் பால்

வெளி கலக்சி, மற்ற கலக்சீகளுடன் சேர்ந்து, கன்னி ராசி தென்படும் Virgo Super Cluster என்னும் பெரும் பகுதியை மையமாகக் கொண்டு சுற்றி வருகிறது. இந்த விவரம் வேதம் கூறும் பிரபஞ்சஇயலுடன் ஒத்துப் போகிறது. பிரபஞ்சவியலின் படி நாம் தென்புறத்தவர். மீண்டும், மீண்டும் பிறந்திறந்து நாம் இன்னும் இங்கேதான் இருக்கிறோம். இங்கிருந்து மீளும்போது, வடதிசைப் பயணம் மேற்கொள்வோம்.

இந்த அமைப்பில் முக்கியப் பாதைகள் வருகின்றன.

1. பிரபஞ்சமும், படைப்பும் முன்னேறும் பாதை.

இது வ.மே - தெ.கி நோக்கிச் செல்வது.
வாயுவிலிருந்து அக்னி நோக்கிச் செல்லும் பாதை.

2. ஜீவர்கள் போய் வரும் பித்ருயான - தேவயானப் பாதை.
இது தெ. மே -வ. கி பாதை.

இந்தப் பாதை ஒரே நேர்க் கோட்டில் இருந்தாலும் எதிர் எதிரே செல்லும் தன்மை உடையவை.

இந்தப் பாதையில் நிகழும் போக்குவரத்து காந்த மண்டலக் கோடுகள் போல இருக்கும். தேவ யானத்தில் சென்றவர்கள் செயல்களில் குறைவு ஏற்பட்டால், பூமிக்கு வந்து நிவர்த்தி செய்து விட்டுப் போக வேண்டும். பீஷ்மர் முதலானோர் பூமியில் பிறந்து இப்படியே.

கீழ் புறம் உள்ள பித்ருயானத்தில் சென்றோர், பூமியை அடை வேண்டும். சிறந்த கர்மங்களைச் செய்தால், அவர்கள் பயணம் மேல்நோக்கி அமையும். மேலும் கீழுமானவை ஜீவர்கள் செல்லும் பாதை. குறுக்காகச் செல்வது பிரபஞ்சம் செல்லும் பாதை.

முக்கிய விரத நாட்களான வைகுண்ட எகாதசி , மகா சிவராத்திரி போன்றவை வரும் போது இருக்கும் விண்வெளி அமைப்பைப் பார்த்தால், நாம் சரியாகவே இந்தப் பாதையைக் கணித்துளோம் என்று அறியலாம். இந்த விரதங்களின் தாத்பரியத்தின் அடிப்டையை வைத்துப் பார்க்கும் போது, நாம் கண்டுள்ள பிரபஞ்சவியல் கூறும் பாதையும், அதில் நான்முகப் பிரம்மனின் செல்லும் பயணம் என்று நாம் கூறுவதும் சரியே என்று தெரிகிறது.




இந்தப் படத்தில் மார்கழி மாத அமைப்பு காட்டப்பட்டுள்ளது. மார்கழியில் சூரியன் தனுர் ராசியிலும், சந்திரன் மிதுனத்திலும் இருக்கும்போது பிரபஞ்சம் செல்லும் பாதையில் சூரியன், பூமி, சந்திரன் வருகின்றன. இது பிரபஞ்சப் பாதை. அதற்குச் செங்குத்தான பகுதியில் வருவது பங்குனி மாதம் வரும் மீன ராசி. இது மோக்ஷ ஸ்தானம் எனப்படும். இது தேவயான வழி. இதை ஈசான திசை என்றும் சொல்கிறோம். காரணம் என்னவென்று இப்பொழுது எளிதாகப் புரியும் என்று நினைக்கிறேன். பிரம்ம லோகம் இந்தத் திசையில் இருக்கவே, இந்த திசை தெய்வீகத்தைக் குறிப்பது. இந்தத் திசை வழியே இந்தக் கர்மச் சக்கரத்தை விட்டு முக்தர்கள் செல்லவே, திரும்பி வராமல் நிலைத்து இருக்கும் பரமபதம் அடையவே, வைகுண்ட ஏகாதசி இந்த அமைப்பில் வருகிறது. வைகுண்ட ஏகாதசி அன்று சந்திரன் தேவயானப் பகுதியைக் கடக்கிறான். அப்பொழுது பரமபத வாயில் திறந்து, நாம் பிறவா நிலையைத் தரும் பெரும் பதத்தை அடைகிறோம் என்கிறோம்.

அதே மார்கழி மாதம் பௌர்ணமியன்று சந்திரன் மிருக சீரிஷத்தில் இருக்கிறான். அப்பொழுது பிரபஞ்சம் செல்லும் வட மேற்கு- தென் கிழக்குப் பாதையில் சூரியனும், சந்திரனும், பூமியும் வருகின்றன. இங்கு மிருக சீரிஷத்திலும் சில சிறப்புக்கள் நம் வேத மதம் கூறுகிறது.

மிருகசீரிஷத்தின் நக்ஷத்திர தெய்வம் சோமன் என்னும் சந்திரன். சோம பானம் பற்றிப் பல இடங்களிலும், பல தத்துவங்களுடனும் சொல்லப்பட்டிருந்தாலும், இங்கே சோமன் என்பது சாவாமை தரும் அமிர்தம்.

இறவாமல் மேலும் மேலும் உற்பத்தி ஆகிக் கொண்டே போகும் வழி என்பதால் இந்தப் பகுதியில் தெரியும் இந்த நட்சத்திரம் சோமனது அருளால் உண்டான நட்சத்திரம் எனப்பட்டது. தலையைத் துருத்திக் கொண்டு துள்ளி ஓடும் மான் போன்று இது இருக்கிறது என்பதால் இந்தப் பெயர். மிருக சீரிஷம் என்றால், மானின் தலை என்று பொருள்.

நாம் மிருகசீரிஷம இருக்கும் திசையை, அல்லது பகுதியை நோக்கினால் அதுவே நமது பிரபஞ்சமும் முன்னேறும் பாதை என்று தெரிந்து கொள்ளலாம். இந்தப் பாதையைக் காட்டும் மார்கழி பௌர்ணமி தினத்தின் போது நம் தமிழ் முன்னோர் பாவை நோன்பை ஆரம்பித்தனர். இரண்டு நோக்கங்களுடன் பாவை நோன்பு செய்யப்படுகிறது. ஒன்று, மழை வேண்டி, மற்றொன்று, கொண்ட கணவனை இந்தப் பிறவி மட்டுமல்லாமல், வரப் போகும் பிறவியிலும் கணவனாகப் பெற வேண்டும் என்பதே.

இவை இரண்டும் எதிர் காலம் பற்றியவை. மழையின் சிறப்பு உயிர்களுக்கு ஆதாரமாக இருப்பது. உயிர்களை வளர்க்க ஏதுவாக இருப்பது. வளர்ந்து செல்லும் படைப்பை வழி நடத்திச் செல்லும் - சோமன் காட்டும் - இந்தப் பாதையைக் காட்டிலும் வேறெந்தப் பாதை இதற்குத் தகுதியாக இருக்கும்?

பாவை நோன்பு எதிர்காலத்தைப் பற்றி வேண்டப்படுவதாக உள்ளது. வீடு பேறு பெறுவதுதான் நம் மதத்தின் குறிக்கோள். ஆனால் அதைப் பெற வேண்டும் என்றால், அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று இயல்களிலும் நாம் நம் வாழ்க்கையைச் செம்மையாகக் கழிக்க வேண்டும். இவற்றை தனியாகச் செய்ய முடியாது. ஒருவருக்கொருவர் நிறை செய்வதாக, (complementary role) ஆண், பெண் இருவருமாக மனையறத்தில் இருந்தால்தான் முடியும். இதில் இந்த மூன்று இயல்களுக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. இவற்றைச் செயலாற்றப் போகும் அங்கங்களான ஆணும், பெண்ணும் சிறந்த ஜோடியாக ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும் என்பதைக் கருத்தில் கொண்டு இப்பிறவியில் அவர்கள் அன்னியோனியம், அது மட்டுமல்ல, பிறவி தோறும் தொடரும் அன்னியோன்னியம் தேவை என்று எங்கேயோ போய் விட்டார்கள் நம் முன்னோர்!

இந்தக் கருத்தை, செயலை ஆயிரம் வருடங்கள் முன் வரை கடை பிடித்து வந்தவர்கள், பாரத வரலாற்றிலேயே நம் தமிழ் மக்கள்தான். இந்த மண்ணிலேதான் குஷ்பூ-கொள்கைகளும் காலூன்றி வருகின்றன. நம் பாரம்பரியம் நினைத்தபோக்கில் உருவாக்கப்பட்டவை அல்ல. நாம் இதுவரை கூறிய பிரபஞ்சக் கொள்கை கண்ணோட்டத்தில் பார்த்தால் நம் பாரம்பரியத்தின் ஆழமும், இந்து மதத்தின் தொலை நோக்கமும் விளங்கும்.




மீண்டும் மிருகசீர்ச நட்சத்திரத்துக்கு வருவோம்.

இதன் முந்தின நட்சத்திரம் ரோஹிணி. ரோஹிணியின் தெய்வம் பிரஜாபதி என்னும் உயிர்களை உண்டு பண்ணும் பிரம்மன் ஆவார். இதன் பிந்தின நட்சத்திரம் ருத்திரனைத் தெய்வமாகக் கொண்ட திருவாதிரை ஆகும். ரோஹிணி, மிருக சீரிஷம், திருவாதிரை என்னும் மூன்று நட்சத்திரங்களும் பிறப்பு, நடப்பு, முடிவு என்பவற்றைக் குறிப்பவை. மிருகசீரிஷம் காட்டும் பாதை, முடிவில் ருத்திரனில் ஐக்கியமாகி விடுகிறது. தோன்றும் பிரபஞ்சம் முடியும் இடத்தில் ருத்திரன் காட்சி தருகிறார். அதை நினைவு படுத்தி மார்கழி மிருக சீரிஷம் முடிந்த அடுத்த நாள் ஆருத்ரா தரிசனம் வருகிறது. இவை அனைத்துக்கும் பல கதைகள் உள்ளன. ஆனால் பிரபஞ்சவியலில் இவை எல்லாம் சில முக்கிய அமைப்புகளைக் குறிப்பதைக் காணலாம். அதனால் மீண்டும் மீண்டும் சொல்லத் தோன்றுகிறது - ஏனோ தானோ என்று எழுந்ததல்ல இந்து மதம்.

மேல் சொன்ன விவரங்களின் தொடர்பாக மேலும் சில விவரங்கள்:

மார்கழி பௌர்ணமியின் போது நமது தென் துருவம் புரட்டாசி மாதம் காட்டும் கன்னி ராசியை நோக்கி உள்ளது. அது பித்ருயானம். புரட்டாசியில் சூரியன் கன்னி ராசிக்கு வரும்போது, சூரியன் இருக்கும் திசையை (ராசியை , மாதத்தை) முன்னிட்டு அந்த மாதம் பித்ருக்களுக்கு முக்கியமாகிறது. அப்பொழுது பித்ருக்கள் பூமிக்கு வருகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. பித்ரு தர்ப்பணம் செய்ய உகந்த நேரம் அது.

இதைப் போன்ற ஒருங்கிணைப்பு வரும் மற்றொரு மாதம் பங்குனி மாதம். பங்குனி மாதத்தில் சூரியன் தேவ யானம் காட்டும் வட கிழக்கு திசையில் வருகிறது. இதனால் பங்குனி மாதம் எல்லாக் கோயில்களுக்கும் விசேஷமாகிறது. பங்குனியில் சேர்த்தியும், தெய்வங்களின் கல்யாணமும் நடப்பது, அந்த தெய்வத்துடன் ஒரு நாள் நாமும் இணைய வேண்டியதை நினைவு படுத்தவோ

என்று எண்ணத் தோன்றுகிறது. பாவை நோன்பின் பயனாக நோன்பு முடிந்து எண்ணம் கை கூடும் மாதமும் பங்குனி தான். பங்குனி உத்தரத்தில், பிரமம் லோகமும், நமது வட துருவமும், சூரியனும், சந்திரனும் ஒரே நேர்க் கோட்டில் வருகின்றன.

மகாசிவராத்திரி வரும் நேரத்தில் இந்தப் பாதைகள் அமையும் விதத்தைப் படத்தில் காணலாம்.




தேவயான அமைப்புக்குச் சற்று முன்னதாகவே மாசி மாத தேய்பிறை சதுர்தசி வந்து விடுகிறது. சில டிகிரி வித்தியாசம் வருகிறது. (அதைக் கணக்கிட முடியும்) . அதே போல இந்த அமைப்புக்குச் செங்குத்தாக வரும் கோடு பிரபஞ்சப் பாதையில் அமைகிறது. அங்கும் அந்த அளவு டிகிரி வித்தியாசம் வரும். இந்த வித்தியாசம்தான் பிரபஞ்சம் வளையும் அளவாக (curvature) இருக்க முடியும்.

இப்படி அமைவதில் ஒரு சிறப்பைக் காணலாம். மகாப் பிரளயம் நடக்கும்போது, பிரம்ம லோகம், பிரபஞ்சப் பாதையில் இன்னும் முன்னேறி விட்டிருக்கும். பிரளயம் நடக்கும் நேரத்தில், பிரம்மனும் அவரது உலகை அடைந்த முக்தர்களும் பிரபஞ்சப் பாதையை விட்டு நீங்கி விட்டிருப்பார்கள். அவரோடு நீங்குபவர்களில், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவர் அருளாலும் மறு பிறவியைக் கடந்தவர்கள் அடங்குவர்.

சிவனுக்கு இன்னும் வேலை முடியவில்லை; வேலை என்றும் முடியாது. Conveyor belt -இல் வருகிறார்போல அண்டங்கள் வந்து கொண்டே இருக்கும். அவற்றை தோற்றமில்லாப் பிரபஞ்சத்தில் அனுப்பிக் கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுதும் தோன்றும் பிரபஞ்சத்தில் படைப்பு ஆரம்பித்துக் கொண்டே இருக்கும். உடுக்கையும், அக்னியும் தூக்கின இரண்டு கைகளுக்கும் ஓய்வே கிடையாது. தூக்கினது தூக்கினபடி இருந்தால்தான் அண்டங்கள் இயங்க முடியும்.

தோன்றும் பிரபஞ்சத்திலும், எங்கெல்லாம் அழிவிலிருந்து ஆக்கம் வருகிறதோ, அங்கெல்லாம் சிவனது உடுக்கை ஒலி கேட்கும். இமயமலை வளர்ந்தபோது அப்படித்தான் ஓயாமல் உடுக்கை ஒலி கேட்டது என்று புராணங்கள் கூறுகின்றன. அப்பகுதியில் இருந்த கடலை முட்டி, அப்பால் இருந்த நிலப்பகுதியை மோதி, மேற்கொண்டு போக வழியில்லாமல் போகவே, மலையாக வளர்ந்தது இமய மலை என்று புவி ஆய்வாளர்கள் கூறுகின்றனர். கடலை அழித்து, மலை வந்தது. அது உடுக்கை ஒலி காட்டும் படைப்பு. அதனால் அங்கு சிவன் அம்சம் இருக்கிறது. அவனை அடைய விரும்பும் சித்தர்களும் அங்கு தான் சித்தி பெறுகின்றனர். இமய மலையில் சித்தாஷ்ரமம் இருந்தது என்றும், அங்கு விஸ்வாமித்திரர் போன்ற ரிஷிகள் வசித்தனர் என்றும், வாமன அவதாரம் அங்கே தோன்றியது என்றும் வால்மீகி ராமாயணம் கூறுகிறது.

எங்கெல்லாம் அழிவிலிருந்து ஆக்கம் வருகிறதோ அது சித்தி பெரும் இடமாகிறது. அப்படிப்பட்ட மற்றொரு இடம் திருவண்ணாமலை. அந்த மலை அணைந்த எரிமலை என்று புவியியலார் கருதுகின்றனர். ஒருகாலத்தில் பிரளய கால அக்னியைப் போல விண்ணளவு உயரும் நெருப்பைக் கக்கிகொண்டிருந்த இடம் அது. அந்த அக்னி அழிக்கவில்லை. சித்தி பெரும் இடமாக ஆக்கி விட்டிருக்கிறது.

**இன்றைக்கு நாம் இந்தப் பிரபஞ்சத்தில் எங்கு இருக்கிறோம்?**




*இந்தக் கேள்விக்கு சிவபெருமானே காலக் கடிகாரமாக உதவுகிறார்.*

*நாம் இருக்கும் இந்தக் காலக்கட்டம் நான்முகப் பிரம்மனின் ஆயுளில் பாதி முடிந்து, அதாவது 50 வருடங்கள் முடிந்து, 51 ஆவது வருடத்தின் முதல் நாள் மதியம் உச்சிப்பொழுது தாண்டி இருக்கும் நேரம் (இந்த விவரங்களைப் பிறகு பார்ப்போம்). நடராஜர் தாண்டவக் கோலம் காட்டும் பிரபஞ்சப் பயணத்தில், அவர்*

*முடி மேல் நம் இப்பொழுது இருக்கிறோம். அதை இவ்வாறு காட்டலாம். பாதையைத் தெரிந்து கொண்டோம்.*

*இனி படைப்பு எப்படி நடந்தது, நடக்கிறது என்று இந்தப் பிரபஞ்சவியல் கூறுவதைப் பார்ப்போம்.*

---

# பிரபஞ்சவியலில் உலகங்களின் தோற்றமும் உயிர்களின் பிறப்பும்

வேத மதம் கூறும் பிரபஞ்சவியலில், பிரபஞ்சச் சக்கரத்தின் கால்பங்கேயான தோன்றும் பகுதியில் நான்முகப் பிரம்மன் படைப்பை ஆரம்பிக்கிறார். இந்தப் படைப்பு நிகழும் விதம், பல வகைகளில் ஆங்காங்கே விளக்கப்பட்டுள்ளது. அவற்றுள் நாம் பார்க்கும் பிரபஞ்ச - உலக வகையில் கிரகித்துக் கொள்ளக் கூடிய அடிப்படைகளை இங்கே விளக்குவோம். முதல் அடிப்படை கீதையில் விளக்கப்படுகிறது. (பகவத் கீதை 3, 4-ஆம் அத்தியாயங்கள்.)

இது **யக்ஞம்** எனப்படும் வேள்வி ரீதியான படைப்பு. யக்ஞம் என்றால் அர்ப்பணிப்பின் வாயிலாக வழிபடுதல் என்று பொருள். வழிபாடு என்பதே அர்ப்பணிப்பு ஆகும். அர்ப்பணிப்பு என்றால் எதையாவது கொடுத்தல் என்று அர்த்தம். எதையாவது ஒன்றைக் கொடுத்தால்தான், பிரதிபலனாக ஒன்று கிடைக்கும். நாம் ஒன்றும் கொடுக்காமல், நமக்கென்று ஒன்றை எடுத்துக் கொண்டால் அது திருட்டுக்குச் சமானம். அதுவே பாபம் என்றும் சொல்லப்படும். அது மட்டுமல்ல, திருப்பிக் கொடுக்காமல் எடுத்துக் கொண்டால், இருப்பு குறைந்து கொண்டே வரும்; மேலும் மேலும் அதனால் கொடுத்துக் கொண்டிருக்க முடியாது.

இந்தக் கருத்துதான் யக்ஞம், ஹோமம், வேள்வி, வழிபாடு, நைவேத்யம், படைப்பு போன்றவற்றுக்கான அடிப்படையானது. இந்த வழிபாட்டை விருப்பு வெறுப்பு இல்லாமல், பற்றிலாமல் செய்ய வேண்டும். படைப்புக் கடவுளான பிரம்ம தேவன் அப்படித்தான் ஆரம்பித்து வைத்தார். 'ப்ரவர்திதம் சக்ரம்' என்று அவரால் பரம்பரையாகத் தொடங்கி வைக்கப்பட்ட இந்தச் சக்கரத்தை நாம் அனைவரும் செயல்படுத்திவந்தால்தான் படைப்பு என்பது தொடர்ந்து கொண்டே செல்லும். அது எப்படி என்று பார்ப்போம்.

யக்ஞம் அல்லது ஹோமம் அல்லது வேள்வி என்றால் அங்கே ஹோம குண்டம் இருக்க வேண்டும். அதில் அக்னி இருக்க வேண்டும். அதில் அர்ப்பணிக்க அவிப்பொருள் இருக்க வேண்டும். அந்த அவிப்பொருள் யாரைச் சென்றடைகிறதோ அவர் அதற்குப் பலன் ஒன்றைத் திருப்பி தருகிறார். அந்தப் பலன் பலரையும் சென்றடையும். அப்படிப் பலன் பெறுபவர்கள், இலவசமாகக் கிடைத்தது என்று வாங்கி அனுபவித்தால் மட்டும் போதாது. பிரதிபலனாக திருப்பிச் செய்ய வேண்டும். அப்படிச் செய்யவில்லை என்றால் அது திருட்டுக்குச் சமானம். அது பாபத்தைக் கொடுக்கும். இது எப்படி நடக்கிறது என்று முதலில் உலக வகையில் புரிந்து கொண்டு, பிறகு பிரபஞ்ச அளவில் காணலாம்.

## உலகம் என்னும் ஹோம குண்டம்

உலகத்தை எடுத்துக் கொண்டால் நீர்-சுழற்சி ஒரு வேள்வி ஆகும். இதில் உலகம் ஹோம குண்டமாகிறது. சூரியனது வெப்பம் அக்னியாகிறது. கடல் மற்றும் நீர் நிலைகளிலிருந்து வெளியாகும் நீராவி அவிப்பொருள் ஆகிறது. இந்த அவிப்பொருள் சென்றடையும் தெய்வம் வருண பகவான் என்னும் மேகம். அவன் இந்திரன் என்னும் தெய்வத்தின் ஆயுதமான வஜ்ராயுதத்தின் (இடி, மின்னல்) உதவியுடன், மித்திரன் என்னும் நட்புத் தெய்வமாக மழை என்னும் பலனைத் தருகிறான்.

இவ்வாறு மழை உண்டாவதே ஒரு வேள்விதான் (கீதை 3-14). இந்த வேள்வி என்பது பிரம்மம் என்னும் முழு முதல் கடவுளிலிருந்து தொடங்கப்பட்டு வருகிறது. தானே தன்னில், தன்னையே அர்ப்பணித்து, தானே உருமாறி, படைப்பை எடுத்துச் செல்கிறது இந்தப் பிரம்மம். (கீதை 4-24)

பிரம்ம வேள்வி என்னும் அந்தப் படைப்பின் பயனாக உண்டாகுவது நீர் ஆகும். அறிவியல் மொழியில் சொல்வதென்றால், நீருக்கு ஆதாரமான ஹைட்ரஜன் உண்டானது இந்த வேள்வியின் பயனாகும். நட்சத்திரங்கள் உருவாகும் விதத்தை நோக்கினால் இந்த ஹைட்ரஜனும் தன் பங்குக்கு வேள்வி என்னும் யக்ஞத்தைச் செய்கிறது என்பது புரியும். தானே, தன்னை, தன்னில் அர்ப்பணித்து, ஹைட்ரஜன் செய்யும் வேள்வியை (thermo nuclear fusion) நட்சத்திரங்கள் என்னும் ஹோம குண்டங்களில் காணலாம். இடைவிடாமல், எதிர்ரபார்ப்பு இல்லாமல் நிகழும் இந்த வேள்வியின் பயனாக இரும்பு முதலான தாதுப் பொருள்கள் வரை உருவாகி, அடுத்தக் கட்ட படைப்புத் தொடருக்கு வித்திடுகின்றன.




அதன் பயனாக உருவான சூரிய மண்டலத்தில், உலகமே ஹோமக் குண்டமாக இயங்கி நடக்கும் வேள்வியின் பயனாக மழை உண்டாகிறது. மழையிலிருந்து உணவு உண்டாகிறது. உணவிலிருந்து உயிர் உண்டாகிறது. இந்தப் பிரபஞ்சத்தில் எங்கணும் நட்சத்திரங்கள் இருந்தால் மட்டும் போதாது. அவற்றைச் சுற்றும் கிரகங்கள் இருந்தால் மட்டும் போதாது. அங்கே சுழற்சி

முகமாக, வேள்வி ரூபமாக, நீர் உண்டாகிக் கொண்டே இருக்க வேண்டும். அப்படிப்பட்ட இடத்தில்தான் உயிர் உண்டாக முடியும்.

## நால்வகை உயிர்கள்

அப்படி உண்டாகும் உயிர்களும் நான்கு வகைகளில்தான் உருவாக முடியும். (சந்தோக்ய உபநிஷத் - 6 - 3 & பிரம்ம சூத்திரம் - 3-1 -21 முதல் 27 வரை.) இதைக் கூறும் சூடாமணி நிகண்டு சூத்திரமும் தமிழில் உண்டு (12-20). இதன்படி உயிர்கள் கருப்பையிலிருந்து தோன்றுவன, முட்டையிலிருந்து தோன்றுவன, வித்து, வேர் முதலியவற்றிலிருந்து தோன்றுவன, ஈரம், வேர்வை அல்லது கசகசப்பிலிருந்து தோன்றுவன என்று நான்கு வகைக்குள் அடங்கி விடுகின்றன. டார்வின் பரிணாமவியல் போன்ற அறிவியல் கோட்பாடுகளுக்கு முட்டுக்கட்டை போடும் அசட்டுக் கோட்பாடுகள் இவை என்று எண்ணுவதற்குமுன் யோசிக்க வேண்டும்.

டார்வினது பரிணாமவியல் எல்லைக்குட்பட்டது என்று இன்று அறிவியலாளர்கள் ஒத்துக் கொண்டிருக்கின்றார்கள். அந்தப் பரிணாமவியல் அந்தந்த இனத்துக்குள்ளே நிகழ்கிறது. அதன்படி, பாக்டீரியாக்களின் பரிணாமம், பாக்டீரியா இனத்துக்குள் நடக்கிறது. பறவை இனப் பரிணாமம், பறவை இனங்களுக்குள்ளே நடக்கிறது. வேத மதம் கூறுவது நால்வகை அடிப்படை வகைகள். அவ்வவற்றுக்குள்ளே பரிணாம வளர்ச்சியும், மாற்றமும் நடக்க முடியும். வகைகளைத் தாண்டி, வேறு வகையுடன் கூடி அல்லது மாறுபாடு அடைந்து புது வகை உருவாக முடியாது. அப்படி நடந்த ஆராய்ச்சிகள் தோல்வியில் முடிந்துள்ளன.

உருளைக் கிழங்கையும், எருமை மாட்டையும் இணைத்து ஒரு ஆராய்ச்சி முன்பு நடந்தது. (வேத மதக் கோட்பாட்டின்படி இவை இரண்டும் வேறு வேறு வகையைச் சேர்ந்தவை). அதன் பயனாக உருளைக் கிழங்கின் சதைப் பற்றுடன் கூடிய எருமையை உருவாக்க முடிந்தது. அல்லது எருமைத் தோலுடன் கூடிய உருளைக் கிழங்கை உருவாக்க முடிந்தது. பரிணாமம் என்று ஒரு புது வகையை உருவாகக் முடியவில்லை.

பிரபஞ்சத்தில் எங்கு தேடினாலும் வேத மதம் கூறும் இந்த நான்கு வகைக்குள்தான் உயிர்கள் அடங்கும். பூமியின் ஆழத்தில் இருக்கும் வெந்நீர் ஊற்றுகளில் இருக்கும் நுண்ணுயிர்களும், வளி மண்டலத்தில் புழங்கும் நுண்ணுயிர்களும், தலை முடி அழுக்கில் தோன்றும் பேனும் ஒரே வகையைச் சேர்ந்தவை. அவை ஈரம், அல்லது கசகசப்பு இருந்தாலே போதும், தோன்றி விடும். மற்ற உயிர்கள் அப்படிப்பட்டவை அல்ல. அவை உண்டாக நீருடன், நிலமும் காற்றும் வேண்டும்.

இவை தேவை அல்ல; ஸ்டீபன் ஹாகிங் சமீபத்தில் கூறியுள்ளாரே, நட்சத்திரங்களின் மத்தியிலும் வேற்று கிரகவாசிகள் இருக்கலாமே என்று

கேட்கலாம். நட்சத்திரங்களின் மத்தியில் வசிக்கும் உயிரினத்தைப் பற்றி வேத மதமும் கூறுகிறது! அந்த உயிரினம் தேவன் என்னும் தெய்வம்! ஹாகிங் அவர்கள் தன்னை அறியாமலேயே வேத மதக் கருத்தைக் கூறியுள்ளார். ஒவ்வொரு தேவனும் 'நக்ஷத்ராணி ரூபம்' என்று நட்சத்திர ரூபத்தில் உள்ளான் என்பது வேத வாக்கு.

நமக்கு அருகில் உள்ள நட்சத்திரமான சூரியனில் இருப்பவனும் தேவன் எனப்படும் தெய்வமே என்கிறது வேத மதம். அவனை அடைய 'மது வித்தை' என்னும் உபாசனையை மேற்கொள்ள வேண்டும். (பிரம்ம சூத்திரம் 1-3- 30, 31 & 32). அவன் பஞ்ச பூதங்களுக்கும் அப்பாற்பட்ட ஒரு உயிரினம். ஐம்பொறிகளால் பார்க்க முடியாத உயிரினம். அவனை அறிய, அல்லது அடைய மனத்தின் பரிணாம வளர்ச்சியால்தான் முடியும். புறப்பொருள் பரிணாமத்தால் அல்லது பௌதிக உபகரணங்களால் அல்ல. சூரியதேவ உபாசகர்கள், சூரிய கிரகணத்தின் போது, அக்னி குண்டம் மூட்டி அதில் தன்னையே அர்ப்பணித்து சூரிய மண்டலத்தில் இருக்கும் புருஷனை அடைவர் என்று சொல்லப்படும் கருத்தை ஊர்ஜித்தப்படுத்தும் வண்ணம், கர்நாடகத்தின் பல பகுதிகளில் கல்வெட்டு ஆதாரங்கள் கிடைத்துள்ளன.

ஆக, வெளியுலக வாசிகள் என்றால் அவர்கள் தேவ வடிவினர் என்பது வேத மதக் கருத்து. தேவர்கள் என்றால் அவர்கள் வகையில், பித்ருக்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், வசுக்கள் என்று பல வகையினரும் அடங்குவர். அவர்கள் உடலை ஊனக் கண்ணால் பார்க்க முடியாது. ஆனால் அவர்களுக்கும் உடல் உண்டு.

உடல் கொண்டவை என்னும் அடிப்படையில் நான்கு வகைகளை வேத மதம் கூறுகிறது. அவை தேவன், மனிதன், விலங்குகள், தாவரங்கள். தேவ வகையினர் வாழ பஞ்ச பூதங்கள் தேவையில்லை. மற்ற வகையினருக்கு பஞ்ச பூதங்கள் தேவை. மற்ற மூன்று வகையினரும், மேற்சொன்ன நான்கு வகை உயிர்களாகப் பிறக்கின்றன.

## யக்ஞ ரூபமான மனிதப் பிறப்பு

மனிதன் ஐந்து அக்னிகள் மூலமாகப் பிறக்கிறான். இதைப் பஞ்சாக்னி வித்தை என்பர். (சந்தோக்ய உபநிஷத் - 5- 4 - 1 முதல் 5 -8 - 2 வரை மற்றும் பிரம்ம சூத்திரம் 3 -1- 22 முதல் 27 வரை.) மனிதப் பிறப்பும் யஞ்ய வழியைச் சேர்ந்தது. ஒன்றிலிருந்து ஒன்றாக அர்ப்பணிக்கப்பட்டு மனிதன் பிறக்கிறான். தன் கர்ம வினைகளுக்கு ஏற்ப, சரீரத்தையும் வாழ்க்கையையும் அனுபவிக்க, பிறப்பெடுக்கத் தயாராகும் ஜீவன் அப்படியே கருப்பைக்குள் நுழைய முடியாது. அது வரும் பாதை ஐந்து அக்னிகள் வாயிலான ஹோமத்தின் அர்ப்பணிப்பு போன்றது.

- முதல் அக்னி மழை. நெருப்பை அணைக்கும் சக்தி மழைக்கு (நீருக்கு) இருப்பதால், அந்த நெருப்பை உள்வாங்கி அதை அணைப்பதால் நீரும் அக்னி என்ப்படுகிறது. பிறக்கத் தயாராகும் ஜீவன் மழையோடு கலந்து பூமியில் விழுகிறது.

- இரண்டாவது அக்னி பூமி. உஷ்ணத்தை உள்வாங்கிக் கொள்வதால் பூமியும் ஒரு அக்னி. மழை மூலமாக வந்த ஜீவன் பூமிக்குள் செல்கிறது. பூமிக்குள் சென்ற ஜீவன் செடிக்குள் நுழைகிறான். செடி மூன்றாவது அக்னி. அதனுள் இடைவிடாது செயலாக்கம் நடந்து கொண்டிருப்பதால் அது உஷ்ணத்துடன் இருக்கிறது. எனவே அதுவும் அக்னி எனப்படுகிறது. செடியின் வேர் வாயிலாக நுழையும் ஜீவன் அந்தச் செடியின் காய் அல்லது கனியில் நிலை கொள்கிறான்.

- பூமிக்குள் வரும் வரை ஜீவனால் திரும்பிச் செல்ல முடியும். பிறப்பெடுப்பது ஜீவனது விருப்பம் மற்றும் ஒத்துழைப்புடன்தான் நடக்கிறது. கர்மவினையை அனுபவிக்கப் பிறக்கத் தயாராகும் ஜீவனே இப்படி இறங்கி வருகிறது. செடி என்னும் மூன்றாவது அக்னியில் நுழைந்தவுடன், அந்த ஜீவனால் திரும்பிச் செல்லுதல் முடியாது. பாதைக்குள் நுழைந்தாகிவிட்ட நிலை. பயணத்தைத் தொடர்ந்துதான் ஆகவேண்டும்.
- ஜீவன் நிலை பெற்ற காய் அல்லது கனியை உண்ணும் ஆண் நான்காவது அக்னி. அவனது உணவுக் குழாய் மூலமாகச் சென்று அவனது விந்தில் அந்த ஜீவன் நிலைபெறுகிறது. அப்படி அது விந்தில் இருக்கும் காலம் இரண்டு மாதங்கள். இது வரை வந்த எந்த நிலையிலும் ஜீவனுக்கு இன்ப துன்பம் என்னும் எந்த அனுபவமும் கிடையாது.

- அந்த ஆணிலிருந்து பெண்ணின் கருப்பைக்கு விந்து செல்கிறது. அந்தப் பெண் ஐந்தாவது அக்னி. கர்ப்பத்தில் நுழைந்த நொடியில் ஜீவன் பிறந்தவனாகிறான். ஆகவே உயிர் என்பது கரு உண்டான நேரத்தில் உண்டாவது. அங்கேயே அதன் கர்ம வினைப்படியான இன்ப துன்பங்கள் ஆரம்பிக்கின்றன.

*சில மணி நேரக் கருவைக் கொல்வதும் சிசுஹத்திதான். கருச்சிதைவு செய்தல் என்பதும் சிசுஹத்திதான்.*

இதில் தெரியும் மற்றொரு உண்மை, கருத் தரித்தல் என்பது எதேச்சையானது அல்ல, எதிர்பாராதவிதமாக அமைவதும் அல்ல. ஒரு கரு உருவாவதற்கு முன் இரண்டு மாதங்கள் அந்த ஜீவன் தந்தை உடலில் இருக்கிறது. அதற்கு முன் மூன்று அக்னி வாயிலாகவும் இறங்கி வர கால அவகாசம் தேவைப்படுகிறது. எனவே ஒவ்வொரு பிறப்பும் திட்டமிட்ட பிறப்பே.

ஆனால் பிறப்பு என்பது ஒரு ஜீவனுக்கு மூன்று விதமாக அமைகிறது என்று ஐதரேய உபநிஷத் (2-3 & 4) கூறுகிறது. தந்தையிடமிருந்து தாயிடம்

புகுந்தது முதல் பிறப்பு. தாயிடமிருந்து உலகில் பிறந்தது இரண்டாவது பிறப்பு. இறக்கும் பொழுது மற்றொரு இடத்தில் பிறப்பதால், அந்த உலகில் பிறப்பது மூன்றாவது பிறப்பு.

இதில் முதல் இரண்டு பிறப்பும் எடுத்துக் கொள்ளும் காலம் = தந்தை உடலில் 2 மாதங்கள் + தாய் உடலில் 10 மாதங்கள். இதில் தந்தை உடலில் செல்லாமல் தாயின் உடலில் முழு காலமும் இருந்ததால், ராமனும் அவன் சகோதரர்களும் கர்ப்பத்தில் இருந்த காலம் 12 மாதங்கள். அவர்கள் பஞ்சாக்னியில் முதல் மூன்று அக்னி வாயிலாக வரவில்லை.

அதே போல கடைசி அக்னியையும் தவிர்த்து பிறப்புகள் நிகழலாம் என்று வேத மதம் கூறுகிறது. (பிரம்ம சூத்திரம் 3 - 1 - 19 ) மனிதர்களுள் அப்படிப் பிறந்தவர்கள் துரோணர், திரௌபதி, திருஷ்டத்யும்னன் போன்றோர். அவர்கள் ஐந்தாம் அக்னியான தாய் மூலமாகப் பிறக்கவில்லை. Parthenogenesis என்னும் முறையில், ஐந்தாவது அக்னி இல்லாமல் கருவில் தோன்றும் விலங்கு உயிரினங்கள் உள்ளன. பொதுவாக கருவில் தோன்றும் உயிரினங்கள் பஞ்சாக்னி முறையில் தோன்றுபவையே.

ஐந்தாவது அக்னி இல்லாமல் தோன்றும் பிறப்பு cloning முறையில் நிகழ்வதையும் காணலாம். தாயின் கருவை எடுத்துக் கொள்ளாமல் பிறப்பது ஐந்தாவது அக்னியைத் தவிர்த்துப் பிறப்பதற்கு ஒப்பாகும்.

இப்படி நிகழும் பிறப்பும், யஞ்ய ரூபமாக, அவிப்பொருளை அர்ப்பணிப்பதைப் போல அர்ப்பணிக்கப்பட்டு பிறக்கிறது. அப்படிப் பிறக்கும் சரீரமும் ஒரு ஹோம குண்டத்துக்கு ஒப்பாகும் என்று வேத மதம் கூறுகிறது. ‘அக்னயோஹ்யத்ர ச்ரியந்தே’ என்று கர்ப்ப உபநிஷத் கூறுகிறது. ஞானாக்னி, தர்சனாக்னி, கோஷ்டாக்னி என்னும் அக்னிகள் இதை ஆச்ரயித்து இருப்பதால், இது சரீரம் என்னும் பெயர் பெற்றது என்கிறது இந்த உபநிஷத். உண்ணும் உணவு பக்குவப் படுத்தப்படுவது முதல், அறிவு பட்டை தீட்டப்படுவது வரை, நம் உடலில் பல அக்னிகளால் இடைவிடாது யாகம் நடத்தப்படுகிறது என்கிறது இந்த உபநிஷத்.

இப்படியாக ரூபமாக உயிர்கள் இயங்குகின்றன. படைப்பின் ஆரம்பம் முதலாக நடைபெற்று வரும் யாகத்தால் தோற்றம் பெரும் பிரகிருதி என்னும் அசேதனப் பொருள்கள் ஒன்றுக்குள் ஒன்றாக, ஒன்றுடன் ஒன்றாக, அர்ப்பணிக்கப்பட்டு, நட்சத்திர மண்டலங்களும் கிரகங்களுமாக உருவாகி வருகின்றன. இந்த யாகத்தின் பயன், உயிர் தோன்றுவதற்கான சூழ்நிலையை உருவாக்குதல்.

இன்றைக்கு நாம் வாழ்கிறோம் என்றால், நாம் இருக்கும் உலகம், உயிர்களைத் தாங்கி, அவற்றின் கர்ம வினைகளைக் கழிக்க உதவுகிறது என்றால், அதன் ஆரம்பம் படைப்பின் ஆரம்பத்திலேயே உண்டான இடைவிடாத செயல்பாடுதான். அந்தச் செயல்பாட்டின் பயனை மனிதர்களாகிய நாம் அனுபவித்துக்

கொண்டிருக்கிறோம். ஒரு பயனை நாம் அனுபவித்தால், அதற்குப் பிரதியாக நாமும் ஏதேனும் தர வேண்டும். அப்படித் தரவில்லை என்றால், நாம் திருடர்களாக ஆவோம், பாபிகளாக ஆவோம். அதற்கென வேத மதம் சில யாகங்களைச் செய்யுமாறு மனிதர்களுக்கு விதித்துள்ளது.

## மனிதர்கள் செய்ய வேண்டிய யக்ஞங்கள்

பிறப்பெடுத்த ஒவ்வொருவனும் தினமும் செய்ய வேண்டிய யக்ஞங்கள் ஐந்து. அவை பஞ்ச யக்ஞங்கள் எனப்படுகின்றன. அவையாவன:-

### 1. பிரம்ம யக்ஞம்

முழு முதல் கடவுளான பிரம்மன் ஆரம்பித்து வைத்த யக்ஞத்தினால்தான் இன்று உலகம் இருக்கிறது. நாமும் வாழ்கிறோம். அந்தப் பயனைப் பெற்றதற்குப் பிரதியாக நாமும் அந்தப் பிரம்மத்திற்கு திருப்பித்தர வேண்டும். அதுவே பிரம்ம யக்ஞம். சிந்தனையாலும், தோத்திரத்தாலும், பூஜையாலும், பாடலாலும் ஏதேனும் ஒரு வகையில் அந்தப் பிரம்மனுக்கு நன்றிகூற வேண்டும். அல்லது நினவுகூர வேண்டும். அவரவர்க்கு உகந்த தெய்வத்தையோ அல்லது விரும்பும் தெய்வத்தையோ பிரம்மமாகப் பாவித்து வணங்கலாம். எல்லாத் தெய்வங்களும் பிரம்மத்தின் அடையாளங்கள் அல்லது பகுதிகளாக இருப்பதால், தெய்வ வழிபாடு பிரம்ம யக்ஞம் ஆகிறது. அந்தத் தெய்வத்தை முழு முதல் பிரம்மமாக நினைத்து வழிபடலாம். நாம் அனுபவிப்பதன் அடையாளமாக பழமோ, பூவோ, இலையோ, அல்லது நீரோ தருவது இந்தப் பிரம்ம யக்ஞத்தில் சேர்க்கப்படும் அவிப்பொருள் ஆகும்.



இங்கே ஒரு விஷயத்தை நாம் அறிய வேண்டும். அவிப்பொருள் போல அளிக்கப்படும் நைவேத்யத்தை, இறைவன் எதிர்பார்த்து இருக்கவில்லை. அப்படிக் கொடுத்தால்தான் அவன் நமக்கு நன்மைகளைத் தருவான் என்பதும் இல்லை.

அவனுக்குப் பசியும் இல்லை. இங்கே சொல்லப்பட்ட யக்ஞ வழியில் அப்படி அளிக்க வேண்டியது நமது கடமை.

பொதுவாகவே தெய்வம், அரசன், குரு, குழந்தை இவர்களைப் பார்க்கப்போகும்போது வெறும் கையுடன் போகக் கூடாது. ஏதேனும் அவர்களுக்கு உகந்ததை எடுத்துச் சென்று அவர்களிடம் கொடுக்க வேண்டும். ஏனென்றால், நம்மைப் பார்த்தவுடன், பிரதிபலன் எதிர்பாராமல் நமக்கு ஏதேனும் இவர்கள் தருவார்கள். குழந்தை சந்தோஷத்தையும், மன நிறைவையும் தருகிறது. அதற்குக் கைம்மாறு நாம் செய்ய வேண்டும்.

**2. தேவ-ரிஷி யக்ஞம்**



பிரபஞ்சத்தைப் பற்றிய, பிரம்மத்தைப் பற்றிய அறிவை உலகுக்குக் கொடுத்தவர்கள் தேவர்களும், ரிஷிகளும் ஆவார்கள். அவர்களுக்குச் செய்யும் கைம்மாறு இந்த யக்ஞம். அவர்களையும் தினமும் நினைக்க வேண்டும். அவர்கள் கொடுத்துள்ள ஸ்லோகங்கள், பாடல்கள், புராணக் கதைகளைச் சொல்வதன் மூலம் இந்த யக்ஞத்தைச் செய்கிறோம். நாயன்மார்கள், ஆழ்வார்கள் கொடுத்த பாசுரங்களைப் பாடுவதன் மூலமும், தேவ, ரிஷிகளான அவர்களை நினைவுகூர்ந்து இந்த யக்ஞத்தைச் செய்தவர்களாவோம்.

**3. பித்ரு யக்ஞம்**



தந்தை மூலமாகத் தாயிடத்தில் பிறந்ததே ஒரு யக்ஞம்தான். அதற்குப் பிரதிபலனாக, அவர்களை நினைவுகூர வேண்டும். மறைந்த முன்னோர்களுக்காகச்

சில நிமிடமேனும் சிந்தையைச் செலுத்தி, அவர்கள் இருக்கும் உலகில் சிறப்பாக இருக்க வேண்டும் என்று எண்ண வேண்டும்.

**4. பூத யக்ஞும்**



நம் பிறப்புக்கு வழிப்பாதையாக அமைந்தது தாவர வகை. இந்த உலகத்தில் நடைபெறும் பலவித சுழற்சிகளுக்கு, தாவரங்களும் விலங்குகளும் காரணமாகின்றன. அவற்றால் நாம் பெரும் பயன்கள் எத்தனையோ. அதனால் அவற்றுக்கும் நாம் நன்றி செலுத்தும் விதமாக பிரத்யுபகாரம் செய்ய வேண்டும். அவற்றுக்குத் தரும் நீரும், உணவும், காட்டும் அக்கறையும் பூத யக்ஞும் எனப்படும். தினமும் ஒரு செடிக்கேனும் நீர் ஊற்ற வேண்டும். ஒரு நாய்க்கோ, பறவைக்கோ உணவிட வேண்டும்.

**5. மனித யக்ஞும்**

தனியாகப் பிறக்கிறோம்; தனியாகப் போகிறோம். ஆனால் இடையில் வாழும் நாள் முழுவதும் மனிதர்கள் பலரது தயவில் வாழ்கிறோம். இதை எழுதும் கணினியும் எதோ ஒரு மனிதன் எடுத்துக் கொண்ட ஒரு முயற்சியால், வேலையால் கிடைத்துள்ளது என்பதை உணர வேண்டும். நேரிடையாகவோ, மறைமுகமாகவோ பல மனிதர்கள் நம் வாழ்கையை நாம் வாழத் துணைபுரிகின்றனர். அதற்குப் பிரதிபலனாக, ஒரு மனிதனுக்கேனும் உணவிட்டுத் தான் நம் உணவை நாம் உண்ண வேண்டும். அதிதி போஜனம் எனப்படும் இந்த மனித யக்ஞுத்தில், நமக்குச் சம்பந்தம் இல்லாத ஒருவருக்காவது தினமும் உணவு கொடுக்க வேண்டும்.

இப்படி உணவிட்ட சமுதாயம்தான் நமது சமுதாயம். இதனால் பசிக் கொடுமை இருக்கவில்லை. ஒருவருக்கொருவர் செய்து கொள்வதால் எல்லாரும் குறைவின்றி வாழ முடிந்தது. இயற்கை பேணப்பட்டது. படைப்பும் குறைவின்றி நடக்க ஏதுவானது.

இந்த பஞ்ச யக்ஞுங்களும் அனைத்து குடும்பஸ்தரும் செய்ய வேண்டியது என்று தர்ம சாத்திரங்கள் சொல்கின்றன. ஒவ்வொரு குடும்பஸ்தனின் வீடும் ஒரு கொலைக் களம் போல் உள்ளது என்கின்றன தர்ம நூல்கள். வீட்டில் அடுப்பு எரிப்பதாலும், நீர் கொதிக்க வைப்பதாலும், உணவு சமைப்பதாலும், மாவு அரைப்பதாலும், வீட்டை விளக்குவதாலும் - இப்படி ஐந்து வழிகளில் பல

நுண்ணுயிர்கள் கொல்லப்படுகின்றன. எனவே குடும்பஸ்தனின் வீடு ‘சூனா’ எனப்படும் கொலைக் களம் போல இருக்கிறது. கொல்லுதல் பாபத்தை உண்டாக்குவது. ஆனால் அறியாமலும், வேறு வழியில்லாமலும் இங்கே நுண்ணுயிர்கள் கொல்லப்படுவதால், அதற்குப் பிராயச்சித்தமாக தினமும் இந்த பஞ்ச யக்ஞங்கள் செய்ய வேண்டும் என்று தர்ம நூல்கள் சொல்லுகின்றன.

யக்ஞமாகச் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது சிறப்பு வாய்ந்தது. பொதுவாகவே நம் மக்களுக்கு ஒரு கருத்து இருக்கிறது - இந்து மதத்தில் தொண்டுள்ளம் போதிக்கப்படுவதில்லை; மாறாக பிற மதத்தில் தொண்டு (service) என்பது முக்கியமாக உள்ளது என்ற நினைக்கிறார்கள். அல்லது நினைக்க வைத்துள்ளார்கள்.

மேலே விவரித்துள்ளதைப் பாருங்கள். இந்து மதம் படைப்பு முதற்கொண்டு கவனம் செலுத்தி, படைப்பின் கடைசியில் உள்ள எல்லா உயிர்களுக்கும் உதவி செய்ய வேண்டும் என்பதை தினசரி கடமையாக விதித்துள்ளது. கடமைக்கும் (duty) , தொண்டுக்கும் (service) வித்தியாசம் உண்டு. நம் கடமையை நாம் ஆற்ற வேண்டி, நாம் தரும் உணவை மனித யக்ஞம் என்று ஒருவர் பெற்றுக் கொள்ளும் போது, அவர் நமக்காக உதவி செய்கிறார் என்றாகிறது. உதவியைப் பெற்றுக் கொள்பவர் நாம் என்று ஆகிறோம். அதனால் அவர் நிலை உயர்வாகவும், நாம் பணிவுடனும் இருக்க வேண்டி வரும். அதாவது, நாம் கொடுப்பதை பணிவோடு கொடுப்போம். அவர்கள் பெருமிதத்தோடு பெற்றுக் கொள்வர். நம் கை தாழ்ந்தும் அவர்கள் கை உயர்ந்தும் இருக்கும்.

ஆனால் பிற மதத்தவர் பின்பற்றும் தொண்டு என்னும் கொள்கையைப் பாருங்கள். அங்கே கொடுப்பவன் கை ஓங்கி இருக்கும். வாங்குபவர் கை தாழ்ந்து, பணிவுடன் இருக்கும். வாங்குபவருக்கு அங்கே பெருமிதம் இருக்காது.

அது இல்லாதவனுக்கு, இருப்பவன் செய்வது போன்றது. அதையே கடமை என்னும் யக்ஞமாகச் செய்யும் போது இல்லாமை, இருப்பது போன்ற எண்ணங்கள் வராது. ஒருவருக்கொருவர் பரஸ்பரம் செய்துகொள்கிறோம் என்ற எண்ணம்தான் வரும். பிறர் கடமையை ஆற்ற வாங்கிக் கொள்கிறேன் என்று வாங்குபவர், சுயமரியாதை இழக்காமல், பெருமிதத்துடன் வாங்கிக் கொள்வார்.

இப்படிக் கவனமுடன் ஏற்படுத்தப்பட்ட பஞ்ச யக்ஞங்கள் ஒவ்வொரு இந்துவும் செய்ய வேண்டியது. இது கடமை. இதைத் தொண்டு என்று சொல்லப்படவில்லை. தொண்டு என்பது இறைவனுக்குச் செய்வது. இந்து மதம் சொல்லும் தொண்டு அடியவர்க்கு அடியானாக, மிகவும் சாதாரணனாகத் தன்னை பாவித்துக் கொண்டு, இறைவன் புகழ் நிலைக்க வைக்க என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அவற்றைச் செய்வதே. படைத்தவனுக்குச் செய்வது தொண்டு. படைப்பு தொடர்ந்து இயங்கச் செய்வது கடமை.